# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

KALKI • 29.08.2010 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



வாழ்க வளமுடன் ஸ்பெஷல்!



"இன்னமும் நடிக்கிறார் ஜயலலிதா!"

செந்தமிழ்ப் போட்டி முடிவுகள்!




கோலிவுட்டைக் கலக்கும் கேரள சேச்சிகள்!

# கல்கி

29.08.2010




ஞாநி ஓ பக்கங்கள் 24



வாழ்க வளமுடன் ஸ்பெஷல் 18, 32, 62, 70, 78

சினிமா 2, 16, 48

செந்தமிழ்ப் பரிசுப் போட்டி முடிவு 60

பட்டுப் புடவைப் பரிசுப்போட்டி முடிவு 96



அடுத்த இதழ்... கோகுலாஷ்டமி ஸ்பெஷல்!



அரசியல் 4, 82, 88, 30

வாசகர் பக்கங்கள் 40, 54, 68, 67, 77



# பர்மிஷன் வாங்கி லவ் பண்ணுவேன்!

—அருள்நிதி

"வம்சம் படத்தைத் தமக்கு முதலில் போட்டுக் காட்டவில்லை என்பதில் தாத்தா கொஞ்சம் கோபமாகத் தான் இருந்தார். ஆனால் படத்தைப் பார்த்தபோது ரொம்பவே என்ஜாய் பண்ணினார். க்ளைமாக்ஸ் சண்டைக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தபோது, பாட்டியிடம், 'என்ன பேரன் அடிக்கற அடியைப் பார்த்து பயந்துட்டியா?' என்று ஜாலியாக கமெண்டும் அடித்தார். படம் ரிலீஸான பிறகும், ஆடியன்ஸ் கருத்தை ஆர்வமாகக் கேட்டுத் தெரிந்து கொள்கிறார். தானும் கிராமத்து மண்ணைச் சார்ந்தவர் என்பதால் யதார்த்தமான கிராமியக் கதையான வம்சத்தை மிகவும் விரும்பினார் தாத்தா" என்கிறார் முதல்வரின் பேரன் அருள்நிதி.

"எப்பாடுபட்டாலும் பிற்பாடு படாதவன்' என்ற அறிமுகத்தோடு வம்சத்தில் வருவேன். பிற்பாடு அடையாமல் முன்னேறியதற்கு என்னுடைய குடும்பத்தில் உள்ளவர்களும் உறவுகளும்தான் முக்கியக் காரணம். சினிமாவில் நடிப்பது என்று முடிவானவுடன் முதலில் சென்று பார்த்தது மீடியாவில் பல ஆண்டுகள் அனுபவமுள்ள கலாநிதி மாறன் அவர்களைத்தான். அண்ணன் உதயநிதி ஸ்டாலின் பல விதத்தில் சப்போர்ட்டாக இருந்தார். குடும்பம் என்ற தூணைப் பிடித்துக் கொண்டுதான் எப்போதும் நிற்கிறேன்" என்றவரிடம் சில கேள்விகள்...

**வம்சத்தின் அன்பரசு? ரியல் அருள்நிதி என்ன வித்தியாசம்?**

வம்சத்தின் அன்பரசு பொறுமைசாலி. ரியல் அருள்நிதி கொஞ்சம் உணர்ச்சிவசப்படுபவன். என்னுடைய கோபங்களும் மிக நியாயமான காரணங்களுக்காகவே மட்டுமே இருக்கும்.

**அப்பா மு.க.தமிழரசுவின் ரியாக்ஷன் எப்படி இருந்தது?**

'சந்தோஷ் சுப்ரமணியம்' படத்தில் வரும் பிரகாஷ்ராஜ் கேரக்டர்தான் கிட்டத்தட்ட என் அப்பாவின் கேரக்டரும். என்னைப் பொத்திப் பொத்தி வளர்த்தவர் என் அப்பா. அதே சமயம் 'உன் தாத்தா பெரிய ஆள் என்பதெல்லாம் மறந்திடு. சாதாரண மனிதனாக உன்னை எண்ணிக் கொள். உனக்குன்னு தனி அடையாளம் வேணும்' என்று அடிக்கடி சொல்வார். ஷூட்டிங் ஸ்பாட்டில் கூட தான் பக்கத்திலே இருந்தால், டைரக்டருக்கு சங்கடமாக இருக்கும் என்றெண்ணி தூரத்திலேயே இருப்பார். நான் ஸ்க்ரீனில் கைத்தட்டல் வாங்கும் காட்சிகளில் எல்லாம், நான் எப்படிக் கஷ்டப்பட்டு நடித்தேன் என்று பலருக்கு இப்போது சொல்லிக் கொண்டிருக்கிறார்.

**உங்களுக்கும், சுனைனாவிற்கும் ஸ்க்ரீன்**



**கெமிஸ்ட்ரி நன்றாக இருப்பதாகச் சொல்கிறார்களே?**

இந்தக் கெமிஸ்ட்ரியை பேச வைத்ததும் பாண்டி ராஜின் கிரியேட்டிவிடிதான் காரணம். ஷூட்டிங்கில் சுனைனாவைச் சுற்றி வேடிக்கை பார்ப்பவர்களின் கூட்டம் அதிகமாக இருக்கும். சேரில் அமர்ந்து கொண்டு கூல் டிரிங்ஸ் குடித்துக் கொண்டிருப்பார். நான் ஒரு ஓரத்தில் லுங்கியுடன் உட்கார்ந்திருப்பேன். என்னை யாருக்கும் தெரியாது என்பதால், என்னைச் சுற்றிக் கூட்டம் இருக்காது. முதல் நாள் பார்வையாளர்களைப் போல ஐந்து படம் நடித்த நடிகை என்ற பிரமிப்புதான் இருந்தது. அந்தப் பிரமிப்பு நீங்கி இணைந்து நடிக்கவும் போகப் போக பழகிக் கொண்டேன்.

**வாழ்க்கையில் காதல்...**

நானும் ஒரு சீரியஸான காதலில் இருந்துள்ளேன். ஆனால் சந்தர்ப்பச் சூழ்நிலையால் அந்தக் காதல் கைகூடவில்லை. இன்று நல்ல நண்பியாக மட்டுமே அந்தக் காதலி இருக்கிறார். எதிர்காலத்தில் இன்னொரு காதல் வந்தால், முதலில் என் வீட்டில் இருப்பவர்களிடம் சொல்லி அனுமதி பெற்று விட்டுத்தான், அந்தப் பெண்ணிடம் காதலை வெளிப்படுத்துவேன். வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுப்பதில் குடும்பத்தினர்களின் விருப்பமும் முக்கியம்.

**அடுத்த படம்...?**

இந்தப் படத்தில் என் ஆக்ஷனுக்குப் பரவலாக வரவேற்பு இருக்கிறது. ஆக்ஷன் படங்கள் செய்யலாம் என்ற ஐடியாவும் இருக்கிறது. அதற்காக மோசமான கதையில் நடிக்க முடியாது. 'வம்சம்' போன்ற ஆழமான கதையில் ஆக்ஷன் செய்வதே என் சாய்ஸ்.

**- ராகவ்குமார்**




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி
பொறுப்பாசிரியர்:
ஆர்.வெங்கடேஷ்
உதவி ஆசிரியர்கள்:
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா
வடிவமைப்பு:
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
பா.கோபால்
தொலைபேசி: 044 - 4343 8888
தொலைநகல்: 044 - 4343 8899
ஆசிரியர் குழு:
044 - 4343 8822
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு:
044 - 4343 8811
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு:
044 - 4343 8833
subscription@kalkiweekly.com
விற்பனை பிரிவு:
044 - 4343 8844
sales@kalkiweekly.com
இன்டர்நெட் முகவரி:
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்):
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

# துணைவேந்தர் தாக்கப்பட்டுள்ளாரே...?

● எம்.மிக்கேல்ராஜ்,
சாத்தூர்

**? பாகிஸ்தானும் இலங்கையும் மாறி மாறி இந்தியாவுக்குத் தொல்லை கொடுத்துக் கொண்டிருப்பது ஏன்?**

! காரணம் சீனா. இந்தியா வலுவான நாடாக ஆகிவிடக் கூடாது; அதன் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டைகள் போட்டுக்கொண்டே இருக்க வேண்டும் என்று சீனா நினைக்கிறது. அதனால்தான் பாகிஸ்தான், இலங்கை, வங்காள தேசம் ஆகிய நாடுகளில் அது தமது ராணுவ ரீதியிலான, அரசாங்க ரீதியிலான உதவிகளைச் செய்கிறது. சமயம் கிடைக்கும் போதெல்லாம் இந்தியாவுக்கு நேரடி தலைவலியைக் கொடுத்துக் கொண்டிருக்கவும் தவறுவதில்லை.

● பெ.பொன் ராஜபாண்டி, மதுரை

**? தி.மு.க. எம்.எல்.ஏ.வால் துணைவேந்தர் தாக்கப்பட்டது பற்றி?**

! கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்பவை தி.மு.க.வைப் பொறுத்தமட்டில் வெறும் அகராதிச் சொற்களாகிவிட்டன. இந்நிலையில், துணைவேந்தர்கள் தாங்கள் கற்ற கல்வியோடு இனிமேல் தற்காப்புப் பயிற்சிகளையும் பெற வேண்டும்!



* நிறைவேறா லட்சிய

● என்.காளிதாஸ்,
சிதம்பரம்

**? மேல் முறையீடு செய்த பள்ளிகளுக்கு, 'அரசு நிர்ணயித்த கட்டணமே வசூலிக்க வேண்டும்', என்று நீதிபதி கோவிந்தராஜன் அறிவுறுத்தியுள்ளாரே?**

! சகலத்திலும் சுதந்திரப் பொருளாதாரம் என்று நிர்ணயித்த பிறகு, கல்வியில் மட்டும் கட்டணக் கட்டுப்பாடு கொண்டு வருவது சாத்தியமில்லை. ஊழலுக்குத்தான் வழிவகுக்கும். பெற்றோருக்குச் செலவு குறையாது. அரசுப் பள்ளிகளை அதிகரித்து, கட்டணமின்றித் தரமான கல்வி வழங்கினால் மக்கள் தனியார் பள்ளிகளை நாடமாட்டார்கள். தரம் கருதித்தான் பணம் செலவழிக்கிறார்கள்.

● வி.விஜயலக்ஷ்மி,
சென்னை - 41 ❐

**? 'சூப்பர் பக்' பாக்டீரியா இந்தியாவில்தான் அதிகம் காணப்படுகிறதென்று இங்கிலாந்து கூறுகிறதே? இந்தியா என்ன பாக்டீரியாக்களின் பிறப்பிடமா?**




* தொடரும்...

# நீங்கள் கேட்டவை—தராசு

! பாக்டீரியாக்கள் உலகெங்கும் உள்ளன. ஆனால், ஆபரேஷன் தியேட்டர்களில் சுகாதாரமின்மையால் பரிணாம பலமுற்று உருவாகிய புது பாக்டீரியா 'சூப்பர் பக்' என்று சொல்லப்படுகிறது. அதனை எதிர்த்து வீழ்த்த உலகில் எந்த மருந்தும் (antibiotic) இல்லை என்பதுதான் மிகப் பெரிய அச்சுறுத்தல். ஆய்வுகள் தீவிரமாக்கப்படுவதுடன் நமது சுகாதாரம் உடனடியாக மேம்படுத்தப்படுவதும் மிக அவசியம்.

● எஸ். ராதாகிருஷ்ணன், திருச்சி

***? ''என்னுடைய நீண்ட நெடிய அரசியல் வாழ்க்கையில் எந்தக் குழந்தையும், ஆணும் பெண்ணும் பசியுடன் உறங்கப் போகக் கூடாது என்பதே எனது லட்சியம்'' என்கிறாரே முதல்வர்?***

! பசி என்பது வயிற்றுப் பசி மட்டும் அல்ல; அறிவுப் பசி; வேலை வாய்ப்புப் பசி; சுயகௌரவப் பசி என்று பல உள்ளன. இவையெல்லாவற்றையும் தணிப்பதே நல்லாட்சியின் லட்சியமாக இருக்க முடியும். நிறைவேறுவது எப்போது, எப்படி என்பதில்தான் சுணக்கம்!

● மு.மதிவாணன், அரூர்

***? கல்யாணத்துக்குப் பிறகும் டோனி என்னுடன் பேசினார் என்கிறாரே லட்சுமிராய்?***

! கல்யாணத்துக்கு முன்பு மட்டுமல்ல; பின்பும் யாரும் யார்கூட வேண்டுமானாலும் பேசலாம். ஆனால் கண்ணியமான பேச்சாகவும் உறவாகவும் இருத்தல் முக்கியம். அத்தகைய நல்லுறவுதான் லட்சுமி ராய்க்கும் டோனிக்கும் இடையே



☐ ரூ.150/- பரிசு பெறுபவர்:
வி.விஜயலக்ஷ்மி, சென்னை - 41

* ரூ.75/- பரிசு பெறுபவர்:
எல்.மோகன சுந்தரி, கிருஷ்ணகிரி

இருக்கும் என்று நம்புவோம்.

● எஸ்.கே.மூர்த்தி, கும்பகோணம்

*? தமிழகத்தைப் பொறுத்தவரை தி.மு.க.- அ.தி.மு.க. மட்டும்தான் மாறி மாறி ஆட்சி அமைக்க வருகின்றன. காங்கிரஸ் எப்போது ஸார் ஆட்சிக்கு வரும்?*

! ''மாநிலத்தை அடியோடு விட்டுக் கொடுத்தாலும் பாதகமில்லை; மத்தியில் காங்கிரஸ் தலைமையில் ஆட்சி அமைந்தால் போதும்'' என்ற பேராசை, முதல் வரிசை காங்கிரஸ் தலைவர்களிடம் மாறும்போது.

● க.கவிதா, செம்மங்குடி

*? பெரியகோயில் கட்டி ஆயிரம் ஆண்டுகள் நிறைவானதையொட்டி தஞ்சையில் தமிழக அரசு இரண்டு நாள் விழா நடத்த இருப்பது பற்றி...?*



● நல்ல தொடக்கம்



● உயரட்டும் அடக்கம்!

! செம்மொழி மாநாடு போலன்றி, அடக்கத்துடனும் கட்சி அரசியல் இன்றியும் நடந்தால் வரவேற்கலாம். அத்தகைய விழாதான் கலைஞரின் பெருமையை ராஜராஜேசுவரம் போன்று உயர்த்தும்; ஆடம்பரம் அல்ல.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்

*? ஜாதி மத பேதம் இல்லாத சமுதாயத்தை உருவாக்க உத்தரவாதம் தரவேண்டிய எல்லா அரசியல் கட்சிகளும் ஜாதிவாரி மக்கள் தொகை கணக்கெடுப்பை ஆதரிப்பது எதைக் காட்டுகிறது?*



★ வெறுப்புக்கு வடிகால்!

! ஜாதியை நம்பி அவர்கள் அரசியல் பண்ணுகிறார்கள் என்பதைத்தான் உணர்த்துகிறது. ஜாதிவாரி கணக்கெடுப்பு முடிவுகளின் அடிப்படையில் அவர்கள் தங்கள் தேர்தல் 'ரோட் மேப்'ஐத் தயாரிக்கக் காத்திருக்கிறார்கள்.

● ஆர்.வசந்தா, சென்னை-86

*? டெல்லியில் நடைபெறப் போகும் காமன்வெல்த் போட்டிக்காகக் கட்டிய அரங்கின் கூரை விரிசல்விட்டு மழை நீர் ஒழுகியிருக்கிறதே! இந்த ஊழலைச் செய்தவர்களுக்கு என்ன தண்டனை தரலாம்?*

! பொறுங்கள். இப்போதைக்குக் கவனமெல்லாம் போட்டிகளை நடத்தி முடிப்பதில்தான் குவியும். அதன் பிறகு விசாரணை அறிவிப்பார்கள்... அறிக்கை அடுத்த காமன்வெல்த் போட்டிகளுக்குள் வந்தால் ஆச்சர்யம்.

● லீலா ராம், தக்கலை

*? நாட்டின் தலைவர்கள் மீது வெறுப்பை வெளிக்காட்ட காலணிகளை வீசுவது சர்வசாதாரணமாகியுள்ளதே?*

! மக்கள் மனங்களைப் புரிந்து கொள்ளாமல் நடக்கும் ஆட்சி; பண்பாடு என்பதற்கு முக்கியத்துவம் தராத கல்வி - இரண்டும்தான் காரணம். ஒரு தனி நபரின் கோபம், ஓராயிரம் மனக்குமுறல்களின் எதிரொலி. லேட்டஸ்ட் இலக்கு ஓமர் அப்துல்லா.

● எல்.மோகன சுந்தரி, கிருஷ்ணகிரி ★

*? திருமலை-திருப்பதியில் பிளாஸ்டிக் பொருட்களைத் தடை செய்ய முடிவு செய்யப்பட்டுள்ளதே?*

! நல்ல தொடக்கம். மிக அத்தியாவசியமான சில அம்சங்களில் மட்டும் பிளாஸ்டிக்கை அனுமதித்து மற்றவற்றுக்குத் தடைவிதிக்கும் போக்கு நாடு தழுவிய முறையில் நிறைவேற, ஏழுமலையான் அருள் புரியட்டும்!

# ஆஹா... ஆல்பம்!

**புதிய பகுதி!**



மணிகண்டன்
கார்த்திகா


ஹரிகிருஷ்ணன்
ஐஸ்வர்யா

**வாசகர்களே!**

திருமண ஃபோட்டோ மட்டுமல்ல, நீங்கள் பெரிதும் ரசிக்கும், பொக்கிஷமாகப் பாதுகாக்கும் ஃபோட்டோ எதுவாயினும் **10 வரிகள் குறிப்புடன்** 'ஜம்'முன்னு' எழுதி 'அனுப்புங்க...

# அவர்களைப் போலவே அவர்களுடைய சருமமும் பரிசுத்தமாக இருக்கட்டும்.

ஃபுட்பால், கிரிக்கெட், லாங் சைக்கிள் ரைட்ஸ், மணல் வீடு, கண்ணாமூச்சி. இதெல்லாம் கோடை காலத்தில் உங்கள் குழந்தைகளை பிஸியாக வைக்கும் சில விஷயங்கள். ஆனால், இந்த விளையாட்டுகள் அனைத்திலும் பொதுவாக இருக்கும் ஓர் விஷயம் அவர்களை பாழாக்கும் ஒன்று. கிருமிகள். உங்கள் குழந்தைகள் நாள் முழுவதும் நன்றாக விளையாடி விட்டு வீட்டிற்குத் திரும்பும்போது நிச்சயம் கூடவே கொண்டு வருவது. அது உங்கள் குழந்தைகளுக்கு அதாவது அவர்கள் சருமத்திற்கு ஏதேனும் தீங்கு விளைவிக்குமா, விளைவிக்காதா என்பது நீங்கள் கையாள்வதைப் பொறுத்தது.

உங்கள் குழந்தையை தினமும் ஓர் ஆன்டிசெப்டிக் சோப்பால் குளிப்பாட்டினால் இந்தப் பிரச்சினையைத் தீர்க்கும் வாய்ப்பு உள்ளது. ஆனால், ஓர் ஆன்டிசெப்டிக் சோப் கிருமிகளை அழிக்கும்போது சருமத்தின் தனித் தன்மையையும் சேர்த்து அழித்து விடும். சருமத்தின் அத்தியாவசிய விஷயங்கள் அனைத்தையும் பறித்து விடும். அதன் மென்மையையுந்தான்! இதற்காக, உங்கள் குழந்தைகள் வெளியில் சென்று விளையாடி மகிழ்வதைத் தடுக்க முடியாது. பிறகு, என்னதான் செய்வீர்கள்? உங்களுக்குத் தேவை, கிருமிகளுக்கு எதிராக ஆற்றலுடன் செயல்புரியும் அதே சமயம் சருமத்தின் மீது கடுமை காட்டாத ஓர் சோப்.



Pears

Germshield™




புதினா சத்துக்களின் நற்குணங்களுடன் பேர்ஸ் ஜெர்ம்ஷீல்டு 99.9% கிருமிகளை அகற்றுவதுடன் சருமத்திற்கு 10 மடங்கு* சிறந்தது. மேலும், ஹியூமெக்டன்ட்ஸ் சருமத்தை நன்கு மாய்ஸ்ச்சரைஸ் செய்து அதை மென்மையாக பரிசுத்தமானதாக ஆக்கும்.

**பேர்ஸ் ஜெர்ம்ஷீல்டு உங்கள் குழந்தையின் சருமம் ஆரோக்கியமாவதற்கு உதவி செய்து கிருமிகளுக்கு கேடயம் போன்ற பாதுகாப்பை அளிக்கும். இது சருமத்தை மாய்ஸ்ச்சரைஸ் செய்வதன் மூலம் அதை நீண்ட காலம் பாதுகாப்பாக வைக்கும்.**

உங்கள் குழந்தையின் சருமத்திற்குத் தேவை, பாதுகாப்பை எவ்வளவு சுலபமான வழியில் அளிக்கலாம் என்பது உங்களுக்கு இப்போது தெரிந்திருக்கும். உங்கள் குழந்தைகளும் கிருமிகளைப் பற்றிக் கவலைப்படாமல் கோடை விடுமுறையை இனிதே கழிக்கட்டும். நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் பேர்ஸ் ஜெர்ம்ஷீல்டை மறக்காமல் பயன்படுத்த வேண்டியதுதான். நீங்கள் குழந்தைகளை பராமரிப்பது போல், பேர்ஸ் ஜெர்ம்ஷீல்டு உங்கள் குழந்தைகளை பராமரிக்கும். மிக இதமாக, ஆனால் தேவைப்படும் இடத்தில் கடினமாக. எல்லாம் எதற்காக? கிருமிகளுக்கு பாடம் புகட்டும்போது சருமத்தை தண்டிக்கக் கூடாது, அல்லவா?

*இது சரும தன்மைகள் மற்றும் மாய்ஸ்ச்சரைஸர்களின் நிலைகளைப் பொறுத்தது.

www.masoompears.com




# கிருமிகளை அகற்றுங்கள்.
## சருமத்தின் பரிசுத்தத்தை அல்ல.

விளையாடும்போது குழந்தைகள் மீது கிருமிகள் படியும். பேர்ஸ் ஜெர்மிஷீல்டு கிருமிகள் மீது மட்டும் கடுமையாக இருக்கும். சருமத்தின் மீது அல்ல. இது 99.9% **கிருமிகளை** அகற்றும் போது இதன் க்ளிசரீன் ஃபார்முலா சருமத்திற்கு ஈரப்பதம் அளித்து அதை மென்மையாக வைப்பதுடன், **சருமத்திற்கு** 10* மடங்கு **சிறந்ததாக** ஆக்கும்.




www.masoompears.com

**ஹோமியோபதி மருத்துவர்**
**ஆர்.ஞானசம்பந்தம் பதிலளிக்கிறார்:**

**வசந்தா நமச்சிவாயம், பெருங்களத்தூர்**

***இரவில் தயிர் சாப்பிட்டால் கபம் அதிகரிக்கும் என்கிறார்களே, மதியம் சாப்பிட்டால் பாதிப்பு இருக்காதா? தயிர் ப்ரியை ஆன எனக்கு இந்தக் கேள்வி பல வருடங்களாக உறுத்திக் கொண்டிருக்கிறது.***



● ஆர்.ஞானசம்பந்தம்



● வெங்கட் ரமணி

அவரவர்களின் நோய் எதிர்ப்பு சக்தியைப் பொறுத்துதான் அவர்கள் சாப்பிடும் உணவு அவர்களுக்குள் பாதிப்புகளை உண்டு பண்ணும். பொதுவாக, நோய் எதிர்ப்பு சக்தி குறைவாக உள்ளவர்களுக்கும் ஒவ்வாமை தன்மை இருப்பவர்களுக்கும் தயிரில் உள்ள yeast மற்றும் பிற கிருமிகள் சளித் தொந்தரவை உண்டு பண்ணும். குளிர் சாதனப்பெட்டியிலிருந்து எடுக்கும் எந்தப் பொருளுமே இவர்களுக்கு ஒத்துக் கொள்ளாது. நோய் எதிர்ப்புத் தன்மை உடையவர்களுக்கு எந்த உணவுமே எதுவும் செய்யாது. அப்படிபட்டவர்கள், காலை, மதியம், இரவு என மூன்று வேளைகளிலுமே தயிரை தைரியமாக சாப்பிடலாம். கபம் என்பது அவர்களுக்குத் தயிர் சாப்பிடுவதால் நிச்சயம் வராது. தயிர் ப்ரியையான நீங்கள் ஃப்ரீயாக தயிரை சந்தோஷமாக சாப்பிட வாழ்த்துக்கள்!

**உஷா சுரேஷ், ஸ்ரீரங்கம்**

***என் மகளுக்கு 15 வயது ஆகிறது. அவளது தலையில் உள்ள இள நரை என்னை ரொம்பவும் அச்சுறுத்துகிறது. கருவேப்பிலை, கரிசலாங்கண்ணி இலைகளை அரைத்து தலையில் போட்டால், இள நரை நீங்கி விடுமா?***

தற்கால இளம் பெண்களுக்கும் ஆண்களுக்கும் இள நரை தோன்ற முக்கியமான காரணம், ஆரோக்கியமற்ற ஃபாஸ்ட் ஃபுட் என்று சொல்லக்கூடிய துரித உணவை உட்கொள்வதுதான். 14, 15 வயதில் தோன்றும் இள நரையானது hormonal imbalance-ன் காரணத்தாலே அல்லது சாப்பிடும் சாப் பாட்டில் சத்துக்கள் குறைவதாலே ஏற்படு கிறது. இவற்றைத் தகுந்த மருத்துவ சிகிச் சையின் மூலம் சரி செய்து விடலாம். கருவேப்பிலை, கரிசலாங்கண்ணியை அரைத்து தலைக்குத் தடவுவதால் மட்டுமே இளநரை மாறிவிடாது. வெளிப்பூச்சுக்கு இவற்றைப் பூசுவதைவிட கருவேப்பிலை துவையல், கரிசலாங்கண்ணி, கீரை வகைகளைக் கொண்டு கூட்டு போல செய்து சாப்பிடுவது நல்ல பலனை அளிக்கும்.

**குழந்தைகள் மனநல மருத்துவர்**
**வெங்கட் ரமணி பதில் அளிக்கிறார்:**

**பி.ஷ்யாம், அண்ணா நகர்**

***'அடி உதை உதவுவது போல அண்ணன் தம்பி கூட உதவ மாட்டார்கள்' என்று சொல்வார்கள். என் 10 வயது மகன், நான் எவ்வளவு சொன்னாலும் கேட்பதில்லை. நான் அடி கொடுத்து அவனைத் திருத்த***

---

உங்கள் சந்தேகங்களை 'கல்கி கிளினிக்' என்று குறிப்பிட்டு அனுப்புங்க...
kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். உங்கள் செல்போனில்,
kacli என்று டைப் செய்து ஒரு ஸ்பேஸ் விட்டு,
உங்கள் கேள்வி, பெயர், ஊர் ஆகியவற்றுடன்
562632 என்ற எண்ணுக்கும் எஸ்.எம்.எஸ். செய்யலாம்.

***நினைத்தாலும், என் சொல் பேச்சை அவன் கேட்பதில்லை...என்ன செய்ய?***

ஷ்யாம். முதலில் உங்கள் மகனை அடிப்பதை இன்றோடு நிறுத்தி விடுங்கள், ப்ளீஸ். ஒரு குழந்தை தன் பெற்றோர்களைப் பார்த்து பயப்பட ஆரம்பித்தால், அங்கே நிச்சயம் அன்பு இருக்காது. அதேபோல பெற்றோர்கள் தம் பிள்ளைகளைப் பார்த்து பயப்பட ஆரம்பித்தால் அங்கேயும் அன்பு மிஸ்ஸிங் ஆகிவிடும். உண்மையான அன்பும் ஆசையும் செய்யும் மேஜிக்கை அடி உதை நிச்சயம் செய்துவிடாது. ஆறு வயது நிரம்பும் வரை எந்தக் குழந்தையாவது தம் பெற்றோரை குறை கூறுவதைப் பார்த்திருக்கிறீர்களா? நிச்சயம் செய்யாது. உங்கள் மகனை அவன் போக்கிலேயே விட்டு மெள்ள சொல்லிச் சொல்லித் திருத்துங்கள். அப்படி ஒன்றும் பெரிய குற்றத்தை அவன் செய்திருக்க மாட்டான் என்று நான் நம்புகிறேன். பெற்றோராக, சிறந்த பெற்றோராக இருப்பது மிகப்பெரிய கலை. அந்தக் கலையை நல்ல விதமாகப் பழகுங்கள். ஆல் தி பெஸ்ட்.

# ஃபாஸ்ட் ஃபுட் சாப்பிட்டா முடி நரைக்கும்..?





இளைஞர் அணி, யூத் விங் என்று ஆரம்பித்துவிட்டு அதன் வெள்ளி விழா வருடம் வரை ஒரே தலைவர் கோலோச்சுவது சகஜமாகிவிட்டது. வெள்ளியோடிய தலைமுடியை வேண்டு மானால் சாயம் போட்டு மறைக்கலாம். ஆனால் இளமையின் துள்ளலுக்கு எங்கே போக...?

இந்த வம்பே கூடாது என்பதில் தீர்மானமாக இருந்துவிட்டனர் ஒய்.ஏ.சி.எம்மை ஆரம்பித்தவர்கள். யூத் அசோசியேஷன் ஃபர் கிளாஸிகல் மியூசிக் என்ற அவ்வமைப்பு இன்று வெள்ளி விழா கொண்டாடுகிறது.

# கட் ஆஃப் இல்லாத உற்சாகம்!



* துவக்கத்தின்போது...

கால் நூற்றாண்டு காலத்தில் பற்பல செயற்குழுக்களைப் பார்த்து விட்டது; இளமைக்குக் கட் ஆஃப் உலக அளவில் 36 வயது என்றால், இங்கே முப்பதிலேயே முற்றுப்புள்ளி! அதனால் உற்சாகத்துக்குக் கட் ஆஃப் இல்லை; இளமைத் துடிப்புக்கும் முற்றுப்புள்ளி இல்லை!

ஜனநாயக அணுகுமுறையுடன் கர்நாடக சங்கீதத்தின் பேரில் மதிப்பும் ஆர்வமும் கொண்ட இளைஞர்கள் சிலர் ஒய்.ஏ.சி.எம்மை ஆரம்பித்தபோது, அது வெள்ளிவிழா கொண்டாடும் என்று நினைத்தார்களா...?

"அதை எதிர்பார்த்தோ அதற்குத் திட்டமிட்டோ நாங்கள் செயல்படவில்லை. அப்போது நாங்கள் எல்லோருமே இருபது வயதுக்கும் குறைவானவர்கள்..." என்கிறார் துவக்க கால செயலாளராக விளங்கிய விஜய் சிவா. "இப்படியொரு கூட்டமைப்பை உருவாக்க வேண்டும் என்ற ஊக்கமும் உற்சாகமும் மட்டும் தான் இருந்தது. ஸ்ரீராம் குமார், உன்னிகிருஷ்ணன், பி.கண்ணன் போன்றவர்கள் இணைந்தோம். அப்போதைய உறுப்பினர் எண்ணிக்கை 15 தான். எங்களுடைய புதிய முயற்சிக்கு மிகப் பெரிய ஆதரவு தந்தவர்கள் தொழில் நிறுவனத் தலைவர்கள். எங்ஃபீல்ட் விச்வநாதன், ஸ்ரீராம் குழுமம் தியாகராஜன், அசோக் லேலண்ட் சேஷசாயி, எஸ்.வி.நரசிம்மன், டி.டி.வாசு, ஹிந்து முரளி, கார்த்திக் நாராயணன் போன்ற பலரும் எங்கள் பேரில் நம்பிக்கை வைத்து, நிதி ஆதரவு கொடுத்ததுடன் உற்சாகமூட்டி ஊக்குவிக்கவும் செய்தனர்."

முதல் ஐந்து வருடங்களுக்கு, தகுதியுள்ள இளம் கர்நாடக இசைக் கலைஞர்களுக்கு

மேடை வாய்ப்புகள் கொடுத்து அவர்களுடைய திறனை உலகறியச் செய்வதுதான் ஒய்.ஏ.சி.எம்மின் குறிக்கோளாக இருந்தது. சிறந்த ரசிகர்களை உருவாக்கும் பொறுப்பும் இருப்பதை சீக்கிரமே உணர்ந்து, பள்ளிகளுக்குச் சென்று மாணவர்களிடையே செயல் விளக்கக் கச்சேரிகள் நிகழ்த்த ஆரம்பித்தனர். Build a Rasika (BAR) என்ற திட்டத்தில் பங்கேற்று முன்னணி இளம் நட்சத்திரங்கள் உழைத்தனர்.

சி.எம். கச்சேரிகளைப் பெரிய அரங்குக்கு இடம்மாற்றினோம். நல்லி, போதீஸ் போன்ற ஸ்பான்ஸர்களை இணைத்துக் கொண்டோம்'' என்கிறார் ஸ்வர்ண ரேதஸ். சஞ்சய் சுப்ரமண்யத்தின் சிஷ்யரான இவர் செயற்குழுவில் இடம்பெற்ற காலத்தில், அங்கத்தினர்களின் எண்ணிக்கை ஐந்நூறைக் கடந்தது.

''வெப்ஸைட் ஆரம்பித்தது நாங்கள்தான்,'' என்கிறார் வித்யா கல்யாணராமன். ''இதன் மூலம் எங்கள் பணிகளும் நிகழ்ச்சிகளும் உலகம் முழுக்க பரவின'' என்கிறார். சூப்பர் சீனியரான ஆர்.வேதவல்லியோ, ''இன்றைய தலைமுறை கலைஞர்களிடம் ஓர் அபூர்வமான ஒற்றுமை உணர்வும் தோழமை குணமும் இருக்கிறது'' என்கிறார். ''அவர்கள் மிகவும் திறந்த, பரந்த மனத்துடன் நல்ல விஷயங்களை ஏற்கிறார்கள்'' என்று கொண்டாடுகிறார்!



✱ தொடரும் பயணம்

**''இன்றைய தலைமுறை கலைஞர்கள் திறந்த, பரந்த மனத்துடன் நல்ல விஷயங்களை ஏற்கிறார்கள்''**

கர்நாடக சங்கீதத்தை ரசிக்க உதவும் வழிகாட்டல் காஸெட் வெளியீடு, அவ்வப்போது வெளியிடப்படும் 'த்வனி' செய்தி ஏடு, கோலாகலமான ஆண்டு விழாக்கள், புத்தாயிரம் ஆண்டு பிறந்தபோது தயாரித்து வழங்கிய பிரமிப்பூட்டும் நிகழ்ச்சி, மாத்ருகா அமைப்புடன் இணைந்து கடந்த சில ஆண்டுகளாக இளைஞர்களுக்கென்றே நடத்தப்படும் சுவானுபவா... என ஒய்.ஏ.சி.எம். புதுப்புது திசைகளில் பிரவேசித்து வெற்றி கண்டு வருகிறது. அதன் இன்றைய செயற்குழு, கடந்த ஆண்டு கல்கி சீஸன் சிறப்பிதழைக் கூட தயாரித்துக் கொடுத்தது.

''சிறிய அளவில் நடந்து வந்த, ஒய்.ஏ.

வெள்ளி விழா நிகழ்ச்சிகள், விதவிதமான விசேஷ காம்பினேஷன் கச்சேரிகளுடன் ஆகஸ்ட் 21 முதல் 29 வரை சென்னை மியூசிக் அகாடமியில் நடைபெறவிருக்கின்றன. நரை திரை மூப்பின்றி நூற்றாண்டையும் கொண்டாட இப்போதே வாழ்த்துவோம்!

**- தேவவிரதன்**



# கல்கி



2010 ஆகஸ்ட் 29
விக்ருதி ஆவணி 13
மலர் : 69
இதழ் : 5

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## காங்கிரஸ் தலைமைக்குக் கண்துடைப்புத் தேர்தல்!

**கா**ங்கிரஸ் தலைவர் தேர்தலுக்கான அட்டவணையை அக்கட்சியின் பொதுச் செயலாளர் ஜனார்த்தன் துவிவேதி வெளியிட்டிருக்கிறார். ஆனால், தேர்தல் நடைபெறப் போவதில்லை! காரணம், சோனியா காந்தியை எதிர்த்துப் போட்டியிட கட்சியில் யாரும் முன்வரப்போவதில்லை!

இத்தகைய தேர்வு முறை எவ்வாறு ஜனநாயகமாகும்? இம்முறையில் தேர்வு செய்யப்படுவதில் என்ன பெருமை இருக்கிறது?!

இதே காங்கிரஸ் கட்சியில் ஒரு கோடி போலி உறுப்பினர்களைக் களையெடுத்திருக்கிறார்கள்! அவர்கள் எவ்வாறு உறுப்பினர்களாக அனுமதிக்கப்பட்டார்கள்? எதற்காக?

உட்கட்சி ஜனநாயகத்தை நிலைநாட்டும் முகமாக, ராகுல் காந்தி பல மாநிலங்களில் இளைஞர் காங்கிரஸில் உட்கட்சித் தேர்தல்களை நடத்தச் செய்திருக்கிறார். அதன் மூலம் பல இளம் தலைவர்கள் தேர்வாகியுள்ளனர். கர்நாடக பயணத்தின்போது மாணவர்களைச் சந்தித்த ராகுல் காந்தி, அவர்களை அரசியலில் பங்கேற்று ஊழலை ஒழிக்க முன்வருமாறு அழைத்திருக்கிறார்.

ஒரு பக்கம், காங்கிரஸின் இமேஜை வளர்க்கவோ அல்லது மெய்யான ஜனநாயக உணர்வினாலோ இவ்வாறு ராகுல் காந்தி முயன்று கொண்டிருக்க, இன்னொரு பக்கம் நான்காவது முறையாக சோனியா காந்தி தலைவராகப் போகிறார்! இவற்றுள் மூன்று முறை போட்டியின்றித் தேர்வு! இந்த முரண், ராகுல் காந்தியின் உட்கட்சி ஜனநாயகப் பணி எவ்வளவு கடினமானது என்பதையே உணர்த்துகிறது.

ஹைய்யா! ஸ்டாலின் தான்
ராஜேந்திர சோழன்




தமிழகத்திலோ, உட்கட்சித் தேர்தல் மூலம் தேர்வான இளைஞர் காங்கிரஸின் மாநிலத் தலைவர் யுவராஜ், கார்த்தி சிதம்பரத்தின் தலையீட்டை எதிர்த்துக் கண்டன அறிக்கை வெளியிட்டிருக்கிறார்! ப.சிதம்பரத்தின் மகன் என்ற செல்வாக்கைப் பயன்படுத்தி, கார்த்தி தமது தனிப்பட்ட வளர்ச்சிக்கான காரியங்களை சாதித்துக் கொண்டு வருவதாகவும் இதனை 28 நாடாளுமன்றத் தொகுதி காங்கிரஸ் தலைவர்கள் ஆட்சேபித்துள்ளதாகவும் கூறியிருக்கிறார். கார்த்தி தங்கள் செயல்பாட்டில் குறுக்கிட்டு இடையூறு செய்வதாக இவர்கள் புகார் கொடுத்துள்ளதாகவும் தெரிகிறது. மேலும், இளைஞர் காங்கிரஸில் பிளவு ஏற்படுத்த கார்த்தி சிதம்பரம் முயன்று வருவதாகவும் பகிரங்கமாகக் குற்றம் சாட்டியுள்ளார் யுவராஜ்!

வாரிசு அரசியலின் பிரதிநிதி என்ற போதிலும் ராகுல் காந்தி உட்கட்சி ஜனநாயகத்தை நிறுவ முயல, வாரிசு அரசியலின் பிடி இன்னமும் காங்கிரஸைக் கட்டுப்படுத்திக் கொண்டுதான் இருக்கிறது!

கட்சித் தலைமைப் பொறுப்புக்கான தேர்தல் வெறும் கண்துடைப்பாக இருக்கும்வரை, மாநில - மாவட்ட அளவிலும் மெய்யான ஜனநாயகத்தை நிறுவ முடியாது. செல்வாக்குடன் நீண்ட கால ஆதிக்கமும் பொருந்திய சிலரும் அவர்களது வாரிசுகளும்தான் கட்சியைக் கட்டுப்படுத்துவர். கட்சி மட்டத்திலும் அதற்கு வெளியேயும் ஊழலுக்கே இது வழிவகுக்கும். ராகுல் காந்தியால் உந்தப்பட்டுக் கட்சியில் சேரும் இளம் உறுப்பினர்களின் உற்சாகம் குன்றிப் போகும். ஏமாற்றம் பெருகும்.

காங்கிரஸின் அனைத்திந்தியத் தலைவர் தேர்வுக்கு செப்டம்பர் 2 வரை அவகாசம் இருக்கிறது. அதற்குள், நேர்மையும் செல்வாக்கும் உள்ள ஓரிருவர் வேட்புமனு தாக்கல் செய்வதை சோனியா காந்தியே வெளிப்படையாக வரவேற்கலாம்.

காங்கிரஸ் கட்சியில் உட்கட்சி ஜனநாயகத்தைக் காப்பாற்றி நல்ல முறையில் தழைக்கச் செய்வது அதன் தலைமைக்கு மட்டுமின்றி நாட்டுக்கும் அவசியத் தேவை. போட்டியின்றித் தேர்வு, நீண்ட காலத் தலைமை என்பதைக் காட்டிலும் 'ஜனநாயக மரபுகளைக் காத்தவர்' என்ற பெருமைதான் சிறப்பானது.

# காதல் சொல்ல வந்தேன்



பர்ஸ்ட் இயர் படிக்கும் பையனுக்கு, ஃபைனல் இயர் படிக்கும் பொண்ணு மேல காதல் வருது. வருதா... வந்தவுடனே அந்தக் காதலைச் சொல்ல முயற்சிப்பதுதான் 'காதல் சொல்ல வந்தேன்' கதை. காதலைச் சொல்லுகிறவரை படத்தை ஜாலியாக நகர்த்திச் சென்ற இயக்குநருக்கு, காதலைச் சொன்ன பிறகு கதையை நகர்த்த சம்பவங்கள் பஞ்சம் ஏற்படுவது அந்தோ பரிதாபம்.

'கனாக் காணும் காலங்கள்' பாலாஜிதான் ஹீரோ. அவரும் முடிந்தவரை இயல்பாக நடித்திருக்கிறார். ஆங்காங்கே, மேனரிஸத்தில் தனுஷை இமிடேட் பண்ணியிருப்பதைக் குறைத்திருக்கலாம். மற்றபடி நடிப்பும் நகைச்சுவையும் கைகூடி வருகின்றன பாலாஜிக்கு. ஹீரோவை விட ரெண்டு வயசு அதிகமாகத் தெரியவேண்டும் என்பதற்காக 'முத்தலான' மேக்னா சுந்தரை ஹீரோயினாகத் தேர்ந்தெடுப்பது சரிதான். அதற்காக நான்கைந்து வயது பெரியவராகத் தெரியுமளவுக்கு அவருக்கு மேக்-அப், உறுத்தலோ உறுத்தல். மேக்னா சுந்தரும் நடிக்கத்தான் செய்கிறார். இருந்தும், ஹீரோ மேல் தமக்குக் காதல் இல்லை என்று சொல்ல லாட்ஜுக்குக் கூட்டிப்போவது நாடகத்தனம். யாருங்க அந்தக் குண்டு பையன்? காமெடியில கலக்குறான் ஸார். மற்றபடி எல்லோரும் படத்துல வந்து போறாங்க.

படத்தைத் தூக்கி நிறுத்துவதில் யுவன் சங்கர் ராஜாவின் இசைக்குக் கணிசமான பங்குண்டு. ஒளிப்பதிவும் எடிட்டிங்கும் இடியோ இடின்னு இடிக்குது. பூபதிபாண்டியன் இயக்கத்தில் வந்திருக்கும் இப்படத்தில் ஹீரோ காதலைச் சொன்னபிறகு தடுமாறும் திரைக்கதையை கிரிஸ்ப்பாக மாற்றியிருந்தால், படம் இன்னும் கூடுதல் கவனம் பெற்றிருக்கும். க்ளைமாக்ஸை இன்னும் புதுசாய் யோசித்திருக்கலாம்.

**காதல் சொல்ல வந்தேன் - கண்கட்டு வித்தை!**

– மகிமைராஜன்



# ஆங்கிலத்தில் ஞான வெள்ளம்!

Introduction to Hindu Dharma, Jagadguru His Holiness Sri Chandrasekharendra Saraswati Swamigal. வெளியீடு: மோத்திலால் பனாரசிதாஸ், 203, இராயப்பேட்டை ஹைரோடு, மைலாப்பூர், சென்னை 4, விலை ரூ. 695

நம் காலத்தின் மகானான மகாபெரியவர் காஞ்சி சங்கராச்சாரியார் பற்றி எவ்வளவு பேசினாலும் எழுதினாலும் தகும். அவரது பரந்த ஞானமும் திட்சண்யமும் தெளிவான கருத்துகளும் புதிதாகப் படிக்க ஆரம் பிக்கும், இந்து மதத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள ஆரம்பிக்கும் ஒவ்வொருவருக்கும் பெரிய சொத்து.




அத்தகைய மகானின் கருத்துகள் உலக அளவில் அனைத்து மக்களையும் சென்று சேர வேண்டும் என்று எதிர்பார்ப்பது மிகவும் பொருத்தம். அதுவும் மேலை நாடுகளில் வாழும் ஆன்மிக அன்பர்களின் சிந்தனைகளை, அனுபவத்தை, மகா பெரியவரின் ஞான வெள்ளம் நிறைக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது இன்னும் முக்கியம்.

இதில் பெரிய தடையாக இருப்பது மொழி. மகா பெரியவரின் தமிழ், சம்ஸ்கிருதக் கருத்துகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் போது, மிகவும் கவனம் வேண்டும். அதே சமயம், மேலை நாட்டினர் புரிந்துகொள்ளும் ஆங்கிலமாகவும் மொழிபெயர்ப்பு இருக்கவேண்டும். பல மொழிபெயர்ப்புகள் ஆர்வத்தினால் மட்டுமே செய்யப்படுவதுண்டு. அவை மேலைநாட்டினரின் ஆங்கில புரிதலோடு, ஒத்திசைவோடு இருக்காது. இது நமது மொழிபெயர்க்கும் திறனில் உள்ள குறை.

இண்ட்ரொடக்ஷன் டு இந்து தர்மா என்ற இந்த அரிய நூல், மொழி இடைவெளியைக் கடந்துவிட்டது. மைக்கேல் ஒரென் பிட்ஸ்ஜெரால்டு என்னும் அமெரிக்கர், மகா பெரியவரின் கருத்துகளில் ஆர்வம் கொண்டு, இந்த நூலைத் தொகுத்து இருக்கிறார். மகா பெரியவரின் எழுத்துகள், பேச்சுகள் ஆகியவற்றில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதிகளை எளிமையாகப் புரிந்து கொள்ளும் வகையில் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து நூலாக்கியிருக்கிறார்.

இந்தப் புத்தகத்தின் இன்னொரு முக்கிய சிறப்பு, மகா பெரியவரின் பல அரிய புகைப்படங்களை மறுபதிப்பு செய்திருப்பது. அவரது பேச்சைப் போன்றே, பார்வையும் அனைவரையும் வசீகரிக்கக் கூடியது. நெஞ்சில் நிலைக்கக்கூடியது. சிறப்பான பணி.

- ஆர்.வி.

விஞ்ஞான வளர்ச்சியில் புறஉலக வாழ்வில் சாதனைகளின் சிகரங்களை எட்டினாலும் அக அமைதியைப் பெற தொடர்ந்து போராட வேண்டியே உள்ளது. இந்த அக அமைதியை மெய்ஞானத்தால் அளிக்கவே திருவள்ளுவர், தாயுமானவர், வள்ளலார், பாரதியார் என வாழ்க்கை வள விஞ்ஞானிகளை வெவ்வேறு காலகட்ட சூழலுக்கேற்ப இயற்கை நமக்கு அளித்தபடி இருந்திருக்கிறது. இதன் தொடர்ச்சியாகவே விஞ்ஞானத்தின் முழுப் பலனையும் நேர்மையாக அனுபவிக்க மெய்ஞானம் என்ற அறநெறியில் அது போய் முடியும் என நிரூபிக்க வந்தவர் அருட்தந்தை வேதாத்திரி மகரிஷி. நூற்றாண்டு காணும் மகரிஷி கடந்து வந்த பயணத்தின் சுவடுகள் இவை...


• இளவயதில்...

● மக்களின் துன்பங்களை ஒழிக்கவும் அவை திரும்பத் தோன்றாத வகையிலான முன்திட்டத்தைக் (Preventive Method) கொடுத்தவர் வேதாத்திரி மகரிஷி. பாமர மக்களின் தத்துவ ஞானி. அருட்தந்தை வேதாத்திரி மகரிஷி சென்னை அருகே செங்கல்பட்டு மாவட்டத்தில் கூடுவாஞ்சேரியில் 1911 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 14-ஆம் நாள் பிறந்தவர்.

● பள்ளிப் படிப்பை எட்டு வயதில் முடித்துக் கொண்ட மகரிஷி வாழ்வில் நிகழும் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் பாடம் கற்கின்ற யுக்தியைப் பெற்றிருந்தார்.

● பாலகிருஷ்ண நாயக்கர் என்ற பெரியவர் மூலம் பக்தி, பஜனை, சதகம் என அனைத்தும் அறிந்தார்.

● பொருளாதாரத் தேவைக்காக வைத்திய பூபதி எஸ். கிருஷ்ணாவிடம் சித்தா, ஆயுர்வேதம், யுனானி மருத்துவ முறைகளைக் கற்றுத் தேர்ந்தார்.

● பரஞ்சோதி மகானிடம் ஆன்மிக அறிதலைப் பயின்றார்.

● சுத்த வெளியே ஆதியென்றும் இறையென்றும் கண்டு உணர்ந்து உலகச் சமாதானம் என்ற அரிய நூலை 1957-ல் வெளியிட்டார். இந்நூல் ஏற்படுத்திய தாக்கத்தால் பல அறிஞர்களின் ஆதரவால் 19.1.58ல் உலக சமுதாய சேவா சங்கம் துவக்கப்பட்டது.

● கோவை பொள்ளாச்சி அருகே ஆழியாறில் வேதாத்திரி மகரிஷி எளிய முறை குண்டலினி யோகா மற்றும் காயகல்ப ஆராய்ச்சி அறக்கட்டளையை 1988ல் துவக்கினார். அங்கு ஓம் வடிவ அறிவுத் திருக்கோயிலை கொஞ்சும் மலைச்சாரலில் அமைத்தார்.

● உலகம் முழுக்க முந்



மனைவியுடன்...



நூறுக்கும் மேற்பட்ட மனவளக்கலை மன்றங்களின் மூலம் மன ஆற்றலைப் பெருக்க அகத்தவம், மன அழுக்கை நீக்க அகத்தாய்வு பயிற்சிகளைப் பட்டிதொட்டியெல்லாம் பரவ வழி செய்தார்.

● அமெரிக்காவின் நியூயார்க்கிலும் ஆக்ஸ்போர்டு நகரில் மிஸ்ஸிஸிப்பி பல்கலைக் கழகத்திலும் தென்கொரிய பல்கலைக் கழகத்திலும் நியூஜெர்சியில் பல பல்கலைக் கழகங்களிலும் ஐ.நா. சபையிலும் அருட்தந்தை உரையாற்றி இருக்கிறார். மகரிஷி எழுதிய Journey of Conciousness மற்றும் Yoga for Modern Age பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

● 2004-ல் ''வேதாத்திரி மகரிஷி ஆன்மிக உள்ளுணர்வுக் கல்வி நிலையம் (Vision for wisdom) துவக்கப்பட்டது. இதன் மூலம் 'யோகமும் மனித மாண்பும்' என்ற பண்பாட்டுக் கல்வி தமிழகத்தின் பல்கலைக்கழகங்களுடன் இணைப்புப் பெற்று பட்டயம் (டிப்ளமோ), இளங்கலை (பி.ஏ.), முதுகலை (எம்.ஏ.) ஆகிய படிப்புகளாகி கற்பிக்கப்பட்டு வருகிறது.

● மனிதனுடைய செயல்களுக்கு ஆதாரமான எண்ணங்களைத் தூய்மையாக்கி, ஆசைகளைச் சீரமைத்து, சினம் தவிர்த்து கவலைகளை ஒழித்து, மனஅழுத்தம் விலக்கி, பகை விடுத்து, மனஅமைதியோடு அனைவரையும் 'வாழ்க வளமுடன்' என வாழ்த்தி வாழும் தகைமையை உலக மக்கள் பெற தன் வாழ்நாள் முழுதும் ஆன்மிகப் பணியாற்றியவர் வேதாத்திரி மகரிஷி. ❑



# விஞ்ஞான மெய்ஞானி!

# தெலுங்கு பெரியாரும் தமிழ் வள்ளலாரும்!

தமிழ்நாட்டுக்கு வெளியில் பெரியாரை பரவலாக மக்கள் அறிந்திருக்கவில்லை. டைரக்டர் ஞானசேகரன் இயக்கி தெலுங்கில் டப்பிங் செய்யப்பட்ட 'பெரியார்' படம் ஆந்திராவில் நல்ல வரவேற்பைப் பெற்றுள்ளது. ''விரைவில் இந்தியிலும் 'பெரியார்' டப்பிங் செய்யப்பட்டு வெளியிடப்படும்'' என்கிற இயக்குநர் ஞான ராஜசேகரனுடன் ஒரு சந்திப்பு:



''ஆந்திராவிலும் பெரியாரை ஒரு சமூக சீர்திருத்தவாதியாகத்தான் பார்க்கிறார்களா?''

''தமிழைப் போலவே கன்னடம், தெலுங்கிலும் சரளமாகப் பேசக்கூடியவர் பெரியார். பெரியார் வாழ்க்கையில் ஆந்திராவுக்கும் பங்கு உள்ளது. ஹைதராபாத்தில் அவர் பிரசங்கங்கள் செய்திருக்கிறார். ஆந்திராவுக்கும் தமிழ்நாட்டுக்கும் மொழியில் வித்தியாசம் இருந்தாலும் கூட, கலாசார அளவில் பெரிய வித்தியாசமில்லை. எனவே, பெரியாரை அவர்கள் ஒரு சமூக சீர்திருத்தவாதி என்ற அளவில் தெரியாது போனாலும், அவரது வாழ்க்கையை ஒரு சினிமாவாகப் பார்க்கிறபோது, அந்நியத் தன்மை துளியுமில்லாமல், படத்துடன் அவர்களால் ஒன்ற முடிகிறது.

இதை எல்லாம்விட, தமிழ்நாட்டில் பெரியாரை ஏற்றுக்கொள்கிறவர்கள், ஏற்றுக் கொள்ளாதவர்கள் என இரு பிரிவினரும் பெரியார் பற்றித் தாங்கள் ஏற்கெனவே கொண்டிருக்கும் கருத்துக்களின் அடிப்படையில்தான் படத்தைப் பார்த்தார்கள். ஆனால், ஆந்திராவில் அப்படி இல்லாமல் ஒரு நடுநிலையான மூன்றாவது கோணத்தில் திறந்த மனத்துடன் பார்ப்பது சாத்தியமானது.''



''வர்த்தகரீதியில் பெரியார் ஒரு வெற்றிப் படமா?''

''நான் அறிந்தவரை 'பெரியார்' படத்தை கமர்ஷியலாகத் தோல்வி என்று சொல்ல முடியாது. சேலத்தில் இரு தியேட்டர்களில் ஹவுஸ்ஃபுல்லாக நூறு நாட்கள்

ஓடியது. அதற்கு அவர்கள் பெரும் முயற்சி எடுத்துக் கொண்டார்கள். படத்தின் விநியோகஸ்தருக்கு நல்ல லாபம் கிடைத்தது. தியேட்டர்கள் மூலமாகவும், டெலிவிஷன் மூலமாக வும் மிக அதிக மக்களை பெரியார் படம் சென்றடைந்தது என்பதில் படத்தின் இயக்குநர் என்ற முறை யில் எனக்கு மகிழ்ச்சி. ஒரு வாழ்க்கை வரலாற்றுப் படம் வெற்றி பெறாது என்பதை பாரதி, பெரியார் ஆகிய



இரண்டு படங்களுமே உடைத் தன.''

**''சுபாஷ் சந்திரபோஸ் பற்றிப் படம் எடுக்க ஸ்கிரிப்ட் எழுதிய நீங்கள் அதைக் கைவிட்டதேன்?''**

''நான் ஸ்கிரிப்ட் எழுதி முடித்த சமயத்தில், பிரபல வங்காள இயக்குநர் ஷ்யாம் பெனகல், போஸ் பற்றி ஒரு படம் எடுத்துக்கொண் டிருந்தார். அதன் பட்ஜெட் 22 கோடி. என் படத்தைத் தயாரிக்க முன்வந்த தயாரிப்பாளர், ஷ்யாம் பெனகலின் 22 கோடி பட்ஜெட் படத்துடன், நம்மால் போட்டி போடுவது சாத்தியமில்லை என்று பின்வாங்கி விட்டார். ஷ்யாம் பெனகல் படத்தை நான் பார்த்தபோது, அந்தப் படமும், என் ஸ்கிரிப்டும் முற்றிலும் வெவ்வேறானவை என்று தெரிந்தது. போஸ் ஒரு வங்காளி என்றாலும் கூட அவர் இந்தியா விலிருந்து வெளியேறி பிரிட்டிஷாருக்கு எதிராகப் போராட படை திரட்டியபோது சிங்கப்பூரி லும், மலேசியாவிலும் அவருக்கு பெரும் ஆதரவாக இருந்தவர்கள் தென்னிந்தியர்கள்தான். குறிப்பாக தமிழர்கள்தான். ஒரு வங்காளியால், ஏராளமான தமிழர்களை எப்படிக் கவர முடிந்தது என்ற விஷ யத்தை நான் கொஞ்சம், அழுத்தமாகக் கையாண்டிருந் தேன். அப்போது அந்தப் படத்தை எடுக்க முடியாமல் போனதில் எனக்கு வருத்தம்தான் என்றாலும், சமயம் வரும்போது அந்தப் படத்தைக் கட்டாயம் எடுப்பேன்.''

**''அடுத்து வடலூர் வள்ளலாரைப் பற்றிப் படம் எடுக்கப் போகிறீர்களாமே?''**

''ஆமாம்! ஸ்கிரிப்ட் எழுதிவிட்டேன். வள்ளலார் தான் தமிழில், செய்யுள் தமிழை இலகுவான தமிழ் ஆக்கினார். ஆன்மிகத்தில் அவரது பங்களிப்பு முக்கிய மானது. தமிழ் சினிமாவில் சுவாரசியம் என்றால் அது ஒரு பெண், காமெடி அல்லது வன்முறை சம்பந்தமான தாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். ஆனால் இவற்றுக்கும் அப்பால் வாழ்க்கையில் ஏராளமான சுவாரசியங்கள் இருக்கின்றனவே! ஈரானிய, கொரியத் திரைப்படங்களில் அதுபோன்ற விஷயங்கள் நிறைய பார்க்கலாம். வள்ளலார் வாழ்க்கையிலும் பல சுவாரசியங்கள் உள்ளன. மதம் என்ற அமைப்புக்குள்ளே இருந்துகொண்டே பெரும் புரட்சிகள் செய்தவர்கள் வள்ளலாரும், ராமானுஜரும். தமிழ்ச் சமூகத்துக்குப் பெரும் பங்களிப்புச் செய்த வள்ளலார், ராமானுஜர் இருவரது வாழ்க்கையையும் படமாக எடுப்பது என் லட்சியம்.''

சந்திப்பு, படம்:

**எஸ்.சந்திரமௌலி**

**கடந்த மூன்று வாரங்கள் நெசவுத் தொழிலின் நசிவுக்கான நிஜங்களைப் பார்த்தோம். இனி அதைக் களைவதற்கான தீர்வுகள் என்ன என்பதை ஜவுளித்துறை ஆலோசகர் எம்.நடராஜன் விளக்குகிறார். இவர் டெல்லி ஐ.ஐ.டி.யில் டெக்ஸ்டைல் டெக்னாலஜியில் எம்.டெக்., படித்தவர். புதியஆலைகளை உருவாக்குவதற்கும் நலிந்த ஆலைகளைச் சீரமைத்துப் புத்துயிர் தருவதற்கும் ஆலோசனைகளைக் கடந்த பதினைந்து ஆண்டுகளாக வழங்கி வருபவர்.**

### 1. இறுதி இருப்பு ஒழுங்கா இருக்கணும்

ஒவ்வோர் ஆண்டும், ஆண்டுத் துவக்க பருத்தி இருப்பு, பருத்தி உற்பத்தி, இறக்குமதி, உள்நாட்டு ஆண்டு தேவை, ஆண்டு இறுதி இருப்பு ஆகியவற்றை மதிப்பீடு செய்து உபரியாக இருக்கும் பருத்தியை மட்டும் ஏற்றுமதிக்கு மத்திய அரசு அனுமதிக்க வேண்டும். ஒவ்வோர் ஆண்டின் இறுதி இருப்பு, அந்த ஆண்டு உள்நாட்டுத் தேவையில் எவ்வளவு சதவிகிதம் இருக்க வேண்டும் என்ற மதிப்பீடும் சரிவர நிர்ணயம் செய்யப்பட வேண்டும். இந்த ஆண்டுக்கான இறுதிக் கையிருப்பை நிர்ணயம் செய்வதில் தவறு இழைத்தால் அடுத்த ஆண்டு பருத்தி விளைந்து உற்பத்தியாகும் வரை காத்திருக்க வேண்டிய சூழல் ஏற்படும். சீன நாட்டில் ஒவ்வோர் ஆண்டும் இறுதி இருப்பில் நாற்பது சதவிகிதம் பஞ்சு இருப்பு வைக்கப்படுகிறது. இந்த ஆண்டு நமக்குத் தேவைப்படும் பஞ்சு கூட, இறுதி இருப்பாக இருக்காது போல் இருக்கிறது.

### 2. உபரி நூலை மட்டும்...

நூல் பற்றாக்குறை, விலையுயர்வைத் தவிர்க்க, ஒவ்வோர் ஆண்டும் இந்தியாவில் நூற்பாலைகளில் நிறுவப்பட்டுள்ள தறிகளின் எண்ணிக்கை, நூல் உற்பத்தி, உள்நாட்டுத் தேவை ஆகியவற்றை மதிப்பீடு செய்து உபரி நூலை மட்டுமே ஏற்றுமதி செய்ய மத்திய அரசு அனுமதிக்க வேண்டும்.

### 3. மானியம் தரணும்!

பாரம்பரிய நெசவுத் தொழில் என்ற அடிப்படையில் விசைத்தறி - கைத்தறி ஆகிய பிரிவுகளில் லட்சக்கணக்கான சாமானிய ஏழை, எளிய உழைப்பாளிகள் வாழ்க்கை நடத்தி வருகின்றனர். தற்போது வரலாறு காணாத வகையில், கூடுதலாக நூல் விலை உயர்ந்துள்ள நிலையில், உள்நாட்டு நெசவுத் தொழிலைப் பாதுகாக்க, உடனடியாகக் கைத்தறி, விசைத்தறி நூலுக்கு மானியம் வழங்க வேண்டும். அதேபோல், சாயப் பட்டறைத் தொழிலுக்குத் தேவையான சுத்திகரிப்பு நிலையங்கள் அமைக்கவும் போதிய




ரமணன்

மானியம் வழங்கலாம்.

**4. கடன் கொடு!**

பருத்தி விவசாயிகளுக்கு விவசாய இடுபொருள் செலவினங்களுக்கான தொகையைக் குறைந்த வட்டியில் கடனாக வங்கிகளின் மூலமாக மத்திய அரசு கொடுக்க வேண்டும்.

**5. அரசே வாங்கிக்கணும்:**

விவசாயிகள் விளைவித்த பருத்தியை நியாயமான குறைந்தபட்ச ஆதார விலைக்கு இந்தியப் பருத்திக் கழகத்தின் மூலம் மத்திய அரசே கொள்முதல் செய்து



# ஏற்றம் தரும் 8 தீர்வுகள்!

நூற்பாலை களுக்கு விற்பனை செய்ய வேண்டும்.

**6. இலவசமா மின்சாரம் வேணும்**

நூற்பாலைகளுக்குத் தேவையான மின்சாரத்தை தமிழக அரசு வழங்க வேண்டும். நூற்பாலைகள், டீசல், ஜெனரேட்டர்களை இயக்குவதற்கு மானிய விலையில் தமிழக அரசு டீசல் வழங்க வேண்டும்.

**7. ஊக்கத் தொகை தரலாமே**

பனியன் ஆயத்த ஆடை ஏற்றுமதியாளர்களுக்கு ஏற்பட்டுள்ள சமீபத்திய உடனடி பாதிப்புகளான நூல் விலை உயர்வு, மின்வெட்டினால் ஏற்பட்டுள்ள கூடுதல் உற்பத்திச் செலவுகளை ஈடுகட்டும் விதத்தில் கூடுதல் ஊக்கத் தொகைகளை மத்திய அரசு அளிக்க வேண்டும்.

**8. கட்டுப்படுத்தணும்**

இந்திய ரூபாயின் மதிப்பு உயர்வதற்கு மூலகாரணமாகவும், உள்நாட்டுப் பொருளாதாரம் பலவீனமடையக் காரணமாகவும் உள்ள அந்நிய நிதி மூலதனத்தைக் குறிப்பாக ஊக முதலீட்டை இந்தியாவுக்குள் நுழைவதைக் கட்டுப்படுத்துவதற்கான நடவடிக்கைகளை மத்திய அரசு அமல்படுத்த வேண்டும்.

பிரச்னைகளும், தீர்வுகளும் இப்போது புரிந்து இருக்கும். அரசுக்கும் புரிந்து அது கவனத்தில் எடுக்க வேண்டும். முன்பு பிரதமரால் வேகமான செயல்திறனுக்காகப் பாராட்டப்பட்ட மத்திய அமைச்சர் தயாநிதிமாறன் அவர் வசமிருக்கும் இந்தத் துறையிலும் அதுபோல் வேகமான மாற்றங்களை நிகழ்த்த வேண்டும். நிகழ்த்துவாரென எதிர்பார்த்து மக்கள் காத்திருக்கிறார்கள். ●

● எம்.நடராஜன்





ஞாநி

# பொய்களைத் திணிக்காதீர்கள்

அண்மையில் ஐ.ஏ.எஸ்.அதிகாரி உமாசங்கரை கருணாநிதி அரசு தற்காலிக நீக்கம் செய்து அவர் மீது சாதிச் சான்றிதழ், சொத்துக் குவிப்புக் குற்றச்சாட்டுகளைச் சுமத்தியிருப்பதைப் பலரும் கண்டித்தார்கள். ஜெயலலிதாவும் கண்டித்தார். தன் ஆட்சியின் சுடுகாட்டுக் கூரை ஊழலை வெளிக்கொண்டு வந்த உமாசங்கரை ஜெயலலிதா நேர்மையானவர் என்று ஒத்துக்கொள்வது தன் ஆட்சியின் குற்றத்துக்கே ஒப்புதல் வாக்குமூலம் தருவதற்குச் சமம்தான்.

ஜெயலலிதாவின் கண்டனத்துக்குப் பதில் சொன்ன தமிழக அரசு, உமாசங்கரே எழுப்பியுள்ள பிரச்னைகளுக்கு பதில் சொல்லவில்லை. தம் மீதான அரசு நடவடிக்கைகளுக்குத் தடை கோரி அவர் நீதிமன்றத்தில் வழக்கு தொடுத்திருக்கிறார். எனவே அந்த விவரங்களுக்குள் நாம் போக வேண்டியதில்லை.

அதே சமயம் உமாசங்கர் தேசிய தாழ்த்தப்பட்டோர் பழங்குடியினர் ஆணையத்திடம் தமிழக முதலமைச்சர், அவரது குடும்பத்தினர் ஆகியோரிடமிருந்து தனக்குப் பாதுகாப்பு கேட்டு புகார் கொடுத்திருக்கிறார். அந்தப் புகாரில் அவர் தெரிவித்திருக்கும் விஷயங்கள் பொய்யாக இருந்தால் அரசு அவர் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும். உண்மையாக இருந்தாலும் சம்பந்தப்பட்டவர்கள் மீது (தன் மீது தானே!) நடவடிக்கை எடுத்தாக வேண்டும்.

உமாசங்கர் சொல்லியிருக்கும் விஷயங்களின் அடிப்படையில் கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண்டிய கடமை முதலமைச்சருக்கு இருக்கிறது.



* உமாசங்கர்

**கேள்வி 1:** அ.தி.மு.க ஆட்சியின்போது நடந்த சுடுகாட்டுக் கூரை ஊழலில் உமாசங்கர் தாக்கல் செய்த அறிக்கையின் அடிப்படையில், உயர் நீதிமன்றம் சி.பி.ஐ விசாரணைக்கு உத்தரவிட்டது. ஏன் இதுவரை அந்த ஊழலில் சிக்கியவர்கள் மீது தி.மு.க அரசு தொடர் நடவடிக்கை எடுக்கவில்லை?

**கேள்வி 2:** 1996ல் தி.மு.க ஆட்சியில் உமாசங்கர் ஜாய்ண்ட் விஜிலன்ஸ் கமிஷனராக நியமிக்கப்பட்டார். அப்போது அவர் பல ஊழல்கள் பற்றி உயர் அதிகாரிகள் மீது குற்றம் சாட்டி அறிக்கைகள்

கொடுத்திருக்கிறார். 1.) சவுத் இந்தியா ஷிப்பிங் கார்ப்பரேஷன் பங்குகள் விற் பனையில் 200 கோடி ரூபாய் நஷ்டம் ஏற்பட்ட விவகாரம். 2.) கிரானைட் சுரங்க குத்தகைக்குக் கொடுத்ததில் 1000 கோடி ரூபாய் இழப்பு. 3.) தமிழ்நாடு வீட்டு வசதி வாரிய மனைகளையும் வீடுகளை யும் கற்பனையான பெயர்களில் ஒதுக்கீடு செய்த விவகாரம். 4.) கோவை மருத்துவக் கல்லூரியின் 20 ஏக்கர் நிலத்தை மகளிர் குழந்தை நலம் என்ற போலி சாக்கில், தனியார் கிளப்புகளுக்குக் கொடுத்த விவகாரம். 5.) மேகமலை வனப்பகுதியில் 7106 ஏக்கர் நிலத்தை ஒரு குடும்பத்துக்குச் சட்ட விரோதமாகப் பட்டா போட்டுக் கொடுத்தது. இந்த முறைகேடுகளில் தொடர்புடையவர்கள் என்று முன்னாள் தலைமைச் செயலாளர் உட்பட பல ஐ.ஏ.எஸ் அதிகாரிகள் மீது உமாசங்கர் அறிக்கை கொடுத்திருக்கிறார். ஒன்றின் மீதும் நடவடிக்கை எடுக்கப்படா தது ஏன்?

**கேள்வி 3:** மறுபடியும் 2006ல் தி.மு.க ஆட்சியில் உமாசங்கர் தமிழக அரசின் எல்காட் நிறுவனத்தின் நிர்வாக இயக்கு நராக நியமிக்கப்பட்டிருக்கிறார். அப் போது அவரைத் தம் ஆழ்வார்பேட்டை அலுவலகத்துக்கு வந்து சந்திக்கும்படி முதலமைச்சரின் துணைவி ராஜாத்தி அம் மாள் தெரிவித்ததாகவும், இரு முறை சந்தித்ததாகவும் உமாசங்கர் தெரிவிக்கிறார். அப்போது மீனவர்களுக்கான 45 ஆயிரம் வயர்லெஸ் செட்டுகள் வழங்கும் ஒப்பந் தத்தைத் தாம் சொல்பவர்களுக்குத் தரு மாறு ராஜாத்தி அம்மாள் வற்புறுத்திய தாகவும் தாம் அதற்கு உடன்பட மறுத்து விட்டதாகவும் உமாசங்கர் கூறியிருக்கிறார். அரசு அதிகாரிகள் யார் யாரைச் சந்திக்க லாம், எங்கே சந்திக்கலாம் என்று விதிகள் உண்டா? சந்திப்புகளுக்குப் பதிவுகள் உண்டா? இந்தச் சந்திப்புகள் பற்றி அரசு

## ஓ பக்கங்கள்

கார் லாக் ஷீட்டுகளில் பதிவுகள் உண்டா? உளவுத்துறை, காவல்துறையிடம் தினசரி முதலமைச்சரை, அவரது நெருங்கிய உறவினர்களை அரசு அதிகாரிகளோ பிறரோ சந்திப்பது பற்றிய பதிவுகள் உண்டா? உமாசங்கர் - ராஜாத்தி அம்மாள் சந்திப்பு பற்றி அரசின் நிலை என்ன?

**கேள்வி 4:** தமிழக அரசுக்குச் சொந்த மான எல்நெட்டின் தலைவராக உமா சங்கர் இருந்தபோது எல்நெட்டுக்குச் சொந்தமான 700 கோடி ரூபாய் சொத்து மதிப்புள்ள ஈ.டி.எல். நிறுவனம் திடீரென்று வேறு தனியார் கைக்கு சட்ட விரோதமாக மாறியதை வெளிப்படுத்த உமாசங்கர் நடவடிக்கை எடுத்தபோது, அவர் பதவி யிலிருந்து மாற்றப்பட்டதாகச் சொல்லுகிறார். ஈ.டி.எல் நிறுவனம், எல்காட் கை விட்டுப் போனது எப்படி, ஏன், யாரால் என்பதை அரசு தெரிவிக்குமா?

**கேள்வி 5:** அடுத்தபடியாக 2008ல் அரசு கேபிள் டி.வி கார்ப்பரேஷனைத் தொடங்கிய போது உமாசங்கரை அதன் நிர்வாக இயக்குநராக முதலமைச்சர் நியமித்தார். முன்னர் ஈ.எல்.டி. முறைகேட்டில் தொடர்பு டைய ஐ.ஏ.எஸ் அதிகாரி இங்கே தமக்கு மேலதிகாரியாக இருப்பதால், அவர் கீழ் தாம் பணியாற்ற முடியாது என்று முதல்வரிடமே உமாசங்கர் சொன்னதாகக் கூறுகிறார். இந்தக் கோரிக்கையை ஏற்று, அந்த அதிகாரியை வேறு பொறுப்புக்கு மாற்றிவிட்டு உமா சங்கரை கேபிள் டி.வி. கார்ப்பரேஷன் பொறுப்பை முதல்வர் ஏற்கச் செய்ததாகவும் குறிப்பிடுகிறார். இது பற்றி அரசின் நிலை என்ன?

**கேள்வி 6:** கேபிள் டி.வி. கார்ப்பரேஷன் பொறுப்பில் தாம் இருந்தபோது, அரசுக் குச் சொந்தமான கேபிள்களை வெட்டி

நாசமாக்கி கிரிமினல் செயல்களில் ஈடுபட்டதற்காக தனியார் கேபிள் டி.வி அதிபர்களான மாறன் சகோதரர்கள், அமைச்சர் பொங்கலூர் பழநிச்சாமி ஆகியோர் மீது தடுப்புக் காவல் சட்டத்தின் கீழ் நடவடிக்கை எடுத்துக் கைது செய்ய வேண்டுமென்று அரசுக்கு அறிக்கைகள் பல முறை அனுப்பியதாக உமாசங்கர் சொல்லியிருக்கிறார். அந்த அறிக்கைகள் மீது அரசு எடுத்த நடவடிக்கைகள் என்ன?

இந்தக் குற்றச்சாட்டுகள் எல்லாம் யாரோ ஒரு அரசியல்வாதியால் எழுப்பப் படவில்லை. இருபது வருடங்களாக அரசுப் பணியில் இருந்துவரும் ஓர் ஐ.ஏ.எஸ் அதிகாரியால் எழுத்து பூர்வமாக, தேசிய தாழ்த்தப் பட்டோர் ஆணையம் முன்பு வைக்கப்பட்டிருக்கின்றன. இது மிகவும் கவலைக்குரிய, நம் ஆழ்ந்த அக்கறைக்குரிய விஷயம். முதலமைச்சர் கலைஞர் கருணாநிதியின் அரசு மேலே எழுப்பப்பட்டிருக்கும் ஒவ்வொரு கேள்விக்கும் விரிவான நேர்மையான பதில்களை மக்களுக்கு அளிப்பது அவசியம்.



மூடப்பட்ட அரசு கேபிள் டி.வி நிறுவனத்தை மறுபடியும் தொடங்குங்கள் என்று கம்யூனிஸ்ட் தலைவர் தா.பாண்டியன் அண்மையில் கோரினார். அதற்குப் பதில் அறிக்கை அளித்த முதலமைச்சர், மூடினால்தானே மறுபடியும் திறப்பதற்கு என்று கேட்டார். அரசு கேபிள் டி.வி நிறுவனம், அது அரசு நிறுவனம் என்பதால் அடக்கமாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது என்று சொன்னார். இதே அடக்கம் ஏன் அரசின் இதர நடவடிக்கைகளில் மட்டும் இல்லை என்பதை அவர்தான் விளக்கவேண்டும். தமிழில் அடக்கம் என்பதற்குச் சமாதி என்றும் ஒரு அர்த்தம் உண்டு. முத்தமிழ் அறிஞர் என்பதால் சிலேடையாகச் சொல்லியிருக்கலாமோ என்னவோ...

## இந்த வார சந்தேகம்

தொடர்ந்து தமிழகம் முழுவதும் மணிக் கணக்கில் மின்வெட்டு அன்றாட வாழ்க்கையைப் பாதித்துக்கொண்டிருக்கும் வேளையில் உயர் நீதிமன்றம், நேப்பியர் பாலம், அண்ணா மேம் பாலம் முதலியவற்றுக்கு லட்சக்கணக்கான ரூபாய் செலவில் மின் அலங்காரம் செய்யும் ஆட்சியை நீரோவின் வாரிசுகள் என்று அழைத் தால் குற்றமா? இந்தச் சமயத்தில் இதையெல் லாம் செய்யவேண்டாம் என்று அமைச்சரிடத்தில் சொல்லும் துணிவு ஒரு ஐ.ஏ.எஸ் அதிகாரிக்குக் கூட இல்லையா?

## இந்த வார விருதுகள்

தமிழ் பண்பாட்டுக்கான கலைஞர் விருது முரசொலி இதழுக்கும் அதன் நிறுவனர் கலைஞர் கருணாநிதிக்கும் வழங்கப்படுகிறது. சதிகாரி, சண்டாளி, சூழ்ச்சிக்காரி, மொட்டைச்சி, முண்டை முதலிய சொற்களை அறிக்கையிலும் கட்டுரையிலும் பயன்படுத்தி இளம் தலைமுறைக்கு வழக்கொழிந்துவரும் பண்பாட்டுக் கூறுகளைக் கற்பிக்கும் மாபெரும் பணிக்காக இந்த விருதுகள் வழங்கப்படுகின்றன.

தினசரி சுமார் 30 கோடி ரூபாய்க்கு மது குடிக்கும் தமிழர்கள் ஒரு நாள் குடிக்காமல் இருந்து துயரக்கடலில் மூழ்கி இறந்து விடக்கூடாது என்ற தாயுள்ளத்துடன் டாஸ்மாக் ஊழியர் வேலைநிறுத்தத்தை காவல் துறை உதவியுடன் முறியடித்ததற்காக, குடிகாத்த கோமான் விருது முதல்வர் கலைஞருக்கு வழங்கப்படுகிறது.

அரசு கேபிள் டிவியிடம் மொத்தம் 50 ஆயிரம் இணைப்புகள் இருப்பதாகவும் சென்ற வாரம் முதலமைச்சர் தெரிவித்தார். இது முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைப்பதைவிட மோசமானது. 'தினமதி' தினசரியின் பத்திரிகையாளர் வி.அன்பழகன் தகவலறியும் உரிமைச் சட்டத்தின் கீழ் இதே முதலமைச்சர் கீழ் இயங்கும் தமிழக அரசிடமிருந்து பெற்றிருக்கும் தகவல்கள் இதோ:

தஞ்சாவூர், கோவை, நெல்லை, வேலூர் ஆகிய நான்கு இடங்களில் அரசு கேபிள் டி.வி தொடங்கப்பட்டது. தஞ்சைக்கு ரூ 7.30 கோடி. கோவைக்கு: 6.76 கோடி. நெல்லைக்கு: ரூ 6.74 கோடி. வேலூருக்கு: ரூ 5.56 கோடி முதலீடுகள். இங்கெல்லாம் மாதாந்தர அலுவலக வாடகை: தஞ்சை ரூ 57,730. கோவை: ரூ 38,500. நெல்லை: ரூ 87,358. வேலூர்: ரூ 42,450. நவம்பர் 10, 2009ல் இருந்த நிலைப்படி, தஞ்சையில் எம்.எஸ்.ஓ எனப்படும் ஒரு சர்வீஸ் ஆபரேட்டர் கூட அரசு கேபிள் டிவியுடன் கிடையாது. தனி கேபிள் ஆபரேட்டர்கள் 32 பேர். மொத்த இணைப்புகள்: 7703. கோவையில் ஒரே ஒரு எம்.எஸ்.ஓ. ஆறு ஆபரேட்டர்கள். மொத்த இணைப்புகள்: 2300. நெல்லையில் எம்.எஸ்.ஓ இல்லை. மூன்று ஆபரேட்டர்கள். 351 இணைப்புகள். வேலூரில் எதுவும் இல்லை. ஆகமொத்தம் இணைப்புகள் வெறும் 10 ஆயிரத்து 354தான். எந்தக் காலத்திலும் 50 ஆயிரம் இணைப்புகள் அரசு கேபிள் டிவி வசம் இருந்ததே இல்லை. முதலமைச்சர் தெரிவித்த 50 ஆயிரம் என்பது முழுப் பொய் என்று அவருடைய அரசின் இன்னொரு துறையே நிரூபிக்கிறது.

இப்போதைய நிலை என்ன என்று அன்பழகன் துருவியதில் ஏப்ரலுக்குப் பின்னர் தஞ்சையில் எல்லாம் மூடப்பட்டு விட்டன. சாதனங்களைச் சென்னை அலுவலகத்துக்கு அனுப்பியாயிற்று. நெல்லையிலும் எதுவுமில்லை. கோவையில் 3 ஆபரேட்டர்கள். மொத்தம் வெறும் 600 இணைப்புகள். சென்ற வாரம் அரசு கேபிள் டி.வி நிறுவனத்திடம் இருக்கும் பணத்தை அரசுக்குத் திருப்பி அனுப்பும்படி உத்தரவு போயிற்றாம். சுமார் நூறு கோடி ரூபாய் வரை இதுவரையில் செலவழித்திருக்கும் நிறுவனம் 19 கோடி ரூபாயைத் திருப்பிக் கொடுத்திருக்கிறது.

முதல்வர் அவர்களே, உண்மைகளைச் சொல்ல விரும்பாவிட்டால், மௌனமாக இருங்கள். நாங்கள் புரிந்து கொள்கிறோம். தயவுசெய்து அரை உண்மைகளையும் முழுப் பொய்களையும் எங்கள் மீது திணிக்காதீர்கள்.

## இந்த வாரப் பூச்செண்டு!

விபத்து இழப்பீட்டுக்குக் கணக்கிடும்போது, வீட்டு நிர்வாகம், இதர இல்லப் பணிகளில் ஈடுபட்டிருக்கும் பெண்களின் வருமான மதிப்பை கணவர் வருவாயில் மூன்றில் ஒரு பங்கு என்று நிர்ணயித்திருக்கும் அபத்தமான மோட்டார் வாகன சட்டப்பிரிவைத் திருத்த வேண்டுமென்று உத்தரவிட்டிருக்கும் உச்ச நீதிமன்ற நீதிபதிகள் கங்குலி, சிங்வி ஆகியோருக்கு இ.வா.பூ.





நன்றி: தினமணி

'அரவான்' பட நாயகி
ரீமா கலிங்கல்





நான்
மலையாளத்து
நீலத் தாமரை...
தமிழகத்தின்
'அரவான்' நாயகி



ரம்யாகிருஷ்ணன்
கோபிக்க வேண்டாம்.
நான்
மலையாளத்துல
'நீலாம்பரி'!



'நீலாம்பரி' படத்தில்
பாமா



'ஊலலல்லா' படத்தில் ப்ரீத்தி பண்டாரி

என்னை
ஹீரோயின் ஆக்கின
ஜோதிகிருஷ்ணாவுக்கு
ஒரு 'ஊலலல்லா'

'நெல்லு'
படத்துல நடிச்ச
அனுபவத்தைச்
சொல்லித்
தீர்க்க முடியாது.





கூலிப்படையை
வைத்து
தூக்குற அளவுக்கு
நான்
'பெண் தாதா'
கிடையாது.
'அழகு தாதா'



'குலசேகரனும் கூலிப்படையும்' படத்தில்
உதயதாரா



'நெல்லு' படத்தின் ப்ரஸ்மீட்டில்
பாக்யாஞ்சலி



# க்ளிக் கார்னர்



'களவாணி' பிரஸ்மீட்டில் ஓவியா



## உண்மையிலேயே நான் நல்லப் பொண்ணு 'களவாணி' கிடையாது!



## என்னைப் போல ஹீரோயின் கிடைப்பது 'அரிது அரிது'ன்னு பேசிடலாமா?



'அரிது அரிது' படத்தில் மீரா

## என்கிட்ட யாராவது 'காதல் சொல்ல வந்தால்' பேசிப்பேசியே தம்பியாக்கிடுவேன்





'காதல் சொல்ல வந்தேன்' ப்ரீமியர் ஷோவில் மேக்னா சுந்தர்

ரம்யா நம்பீசன்



## அளந்து அளந்து நடிக்கிறதுதான் என்னோட பாலிஸி!

# பாலிடிக்ஸ் பஜார்

### ராஜராஜன் சென்டிமெண்ட்!

தஞ்சை பெரிய கோயிலை ராஜராஜன் கட்டி ஆயிரம் வருடங்களானதை ஒட்டி தமிழக அரசு இரண்டு நாட்கள் விழா ஏற்பாடு செய்திருக்கிறதல்லவா! இப்போது ராஜராஜன் சென்டிமெண்ட் அதிகார மையங்களின் வீடுகளில் பரபரப்பாகப் பேசப்படுகிறதாம். கோயிலுக்குள்ளே போன அரசியல் தலைவர்கள் சரிவுகளைச் சந்தித்த நிகழ்வுகளைச் சொல்லி, "இந்த விழாவைத் தேர்தலுக்குப் பின்னே கூட வைத்துக் கொண்டிருக்கலாமே" என்கிறார்களாம். "முதல்வர் இது தொடர்பாக நடக்கும் விழாவில் கோயிலுக்கு வெளியே திலகர் திடலில் பேசுகிறார்" என்று அவர்களுக்குள்ளாகவே ஆறுதலும் சொல்லிக் கொள்கிறார்களாம். பொதுவாக பெரிய கோயிலுக்குள் போவதை அரசியல்வாதிகள் தவிர்த்து விடுகிறார்கள். அப்படியே போக வேண்டிய அவசியம் இருந்தாலும் முக்கிய வாசல் வழியாகப் போவதில்லை. இந்த சென்டிமெண்டை உடைத்து துணிந்து முக்கிய வாசல் வழியாக கோயிலுக்குள்ளே போனவர் வைகோ!


• பெரிய சென்டிமெண்ட்


• 'தில்' வைகோ

## சிக்குவாரா சித்திரகுப்தன்?

### சிக்குவாரா சித்திரகுப்தன்?

அ.இ.அ.தி.மு.க.வின் அதிகாரபூர்வமான நாளிதழான நமது எம்.ஜி.ஆர். தினசரியை, (கட்சிக்காரர்கள் உட்பட) எல்லோரும் படிக்க வைக்கும் வகையில் பல புதிய அம்சங்களைப் புகுத்தச் சொல்லியிருக்கிறார் ஜெ. அதன்படி கார்ட்டூன், அதிரடி பெட்டிச் செய்திகள், கவிதைகள் என்று பத்திரிகை கலகலப்பாக வருவதாகச் சொல்லுகிறார்கள் அ.தி.மு.க.வினர். குறிப்பாக கருணாநிதியை நையாண்டியுடன் 'நச்'செனத் தாக்கும் உரைநடை வீச்சைப் படித்து தி.மு.க. வட்டாரம் கொதித்துப் போகிறதாம். அதை எழுதும் 'சித்திர குப்தன்' யார் என்ற கேள்வி உளவுத் துறையின் மண்டையைக் குடைகிறதாம்.

### தனிக்காட்டுராஜா!

தமது வெளிப்படையான பேச்சுக்களால் கருணாநிதிக்கு 'வலி'யை உண்டாக்கிய இளங்கோவன் இப்போது கொஞ்சம் அமைதியாகியிருக்கிறார். "வரும் சட்டமன்றத் தேர்தலை தி.மு.க.வுடன் சேர்ந்தே சந்திப்போம்" என்று சோனியா உறுதியாகச் சொல்லி விட்டதால் குழப்பத்தில் இருக்கிறாராம் இளங்கோவன். இந்தச் சூழலில் "1996ல் அ.தி.மு.க. கூட்டணியை எதிர்த்து

மூப்பனார் த.மா.க. என்ற தனி இயக்கம் கண்டது போல், இப்போது தி.மு.க. கூட்டணியை எதிர்த்து நாமும் தனி இயக்கம் கண்டு ஜெயலலிதாவுடன் சேர்ந்து சில இடங்களைப் பெற்று தேர்தலில் போட்டியிடலாமே?'' என்று சிலர் இளங்கோவனைக் கொம்பு சீவி விடுகிறார்களாம். ''பெரும்பான்மையான காங்கிரஸ் தொண்டர்கள் தி.மு.க. கூட்டணிக்கு எதிராக இருந்தாலும், 'தனி இயக்கம்' என்றால் நம்மைக் கைவிட்டு விடுவார்கள். இயக்கத்திற்குள்ளேயே இருந்து நம் கருத்துக்கு ஆதரவு தேட வேண்டும்'' என்கிறாராம் இளங்கோவன்.

## துட்டு பார்க்கும் தோழமை

தி.மு.க. ஆட்சியின்போதெல்லாம், கரூர் பகுதியைச் சேர்ந்த ஒரு மூன்றெழுத்துத் தொழிலதிபர் ஆறுகளில் மணல் அள்ளும் தொழிலில் கொடிகட்டிப் பறப்பார். இப்போதும் கூட அப்படித்தான் நடக்கிறது. கரூர் அமராவதி, காவிரியாற்று படுகை சகட்டுமேனிக்குச் சூறையாடப்படுகிறது. ''தமிழ்நாட்டில் மணல் கொள்ளை!'' என்று ஒரு பக்கம் ஜெயலலிதா அறிக்கை விட்டுக் கொண்டிருக்க, உள்ளூர் முக்கிய அ.தி.மு.க. வினர் மணல் (கோடிக்கணக்கில்) அள்ளும் தி.மு.க. தொழிலதிபரின் அரவணைப்பில் இருக்கிறார்களாம்.

## உடைக்குமா உளவுத்துறை!

தென் தமிழ்நாட்டில் புதிய தமிழகம், முஸ்லிம்களின் அமைப்பான த.மு.மு.க. ஆகியவற்றை வளைத்துப் போட்ட ஜெ., அடுத்து கொங்கு முன்னேற்றக் கழகத்தையும் கூட்டணியில் இணைத்துக் கொள்வார் என்கிறார்கள் கொங்கு மண்டலத்தில் செல்வாக்கான இந்த அமைப்பு. அப்படி அ.தி.மு.க. அணியில் சேரும் பட்சத்தில் அதை உடைக்கும் சேவையைச் செய்ய வேண்டும் என்று உளவுத் துறைக்குச் சொல்லப்பட்டிருக்கிறதாம்.


• வளரும் இலை


• ராஜா சேனல்


• உள்குத்து

## ராஜா கையை வைச்சா!

ஸ்பெக்ட்ரம் விவகாரத்தில் சில மீடியாக்களின் செயல்பாட்டால் கடுப்பாகிப் போயிருக்கும் மத்திய அமைச்சர் ராஜா, சொந்தமாகவே பத்திரிகை, சேனல் துவக்கி விடலாமா என்ற யோசனையில் இருக்கிறாராம். ''எதிர்கால தி.மு.க. அரசியலில் இவை தேவை என்று அவர் கருதக்கூடும். அவரைப் போன்றவர்களுக்கு இதெல்லாம் ஜுஜுபி'' என்கிறார்கள் உடன்பிறப்புகள்.

– சஞ்சயன்

# தீயவர்கள் பிறப்புக்கு யார் காரணம்?

**எ**ண்ணற்ற சந்தேகங்களுக்கு மகரிஷி பதில் அளித்து இருக்கிறார். அவற்றில் அபூர்வ தகவல்களைக் கொண்ட சில பதில்கள் இங்கே...

**பெற்றோரின் வினைத் தொடரே குழந்தைகள் என்றால் நல்ல குணம் படைத்தவர்களுக்குத் தீயகுணம் படைத்த குழந்தைகள் பிறப்பது ஏன்?**

பரிணாமத்தில் வந்த பிறவித் தொடரில் எண்ணற்றப் பதிவுகள் மனிதனிடம் இருக்கும். அவற்றை ஆழ்நிலைப் பதிவு, மேல்நிலைப் பதிவு எனப் பிரிக்கலாம். தீயகுணம்





உள்ளே அடங்கியிருக்கும்போது நற்குணம் செயலுக்கு வந்து கொண்டு இருக்கும். அப்போது நல்ல மனிதனாக வாழ்வான். உள்ளே அடங்கியிருக்கும் தீய குணங்களையும் தீயச் செயல்களையும் விரிப்பதற்கு வாய்ப்பு இல்லாமல் இருக்கலாம். அவை கருமையத்தில் மட்டும் ஆழ்நிலைப் பதிவாக இருக்கும்.

அவனுடைய விந்துவின் பிறவித் தொடராகத் தோன்றும் குழந்தைகள் மூலம் அந்த எண்ணம் எழுச்சிப் பெறும். அதனால் அந்தக் குழந்தைகள் அவர்களின் பெற்றோர் செய்ய முடியாமல் விட்ட செயல்களையும் செய்கிறார்கள். எனவே தீய பதிவுகளைத் தவிர்க்க... தவத்தினால் விளைவு அறிந்த, விழிப்பு நிலையில் நின்று செயலுக்கு உரிய வினையைக் கணித்து, தீயபதிவுகள் எழாது காக்கும் மனவளக் கலையைக் கற்றுக் கொள்வது நல்லது.

**குழந்தைகளிடம் Soul Attached ஆகுமா?**

ஆகாது. மூளை வளர்ச்சி முழுமை அடைந்த பின்பே மற்ற ஆவிகள் இணைய முடியும். அவ்வாறு இல்லாமல் ஒரு குழந்தைக்கு வேறு உயிர்த் தொடர்பு இருக்கிறது என்றால் அது அவர்களுடைய பெற்றோரின் கருவின் மூலம் இணைந்து வந்ததாகத்தான் இருக்க முடியும். கருவழியே இணைந்து வந்த ஆவி 12 வயது வரை குழந்தையிடம் ஆட்சியை நடத்தும். அப்போதுதான் சங்கீதம் கற்காமலேயே ராகங்களை இனங்காணுவது, திருக்குறளை முழுமையாகச் சொல்வது இவையெல்லாம். 12 வயதிற்குப் பின் குழந்தையின் மூளை சுய ஆட்சி பெறும்போது வந்திருக்கும் ஆவி விடைபெறும். விடைபெறாவிட்டால் இரண்டு ஆவிகளும் இணைந்து முரண்பட்டால் குழந்தையின் உயிருக்கு ஆபத்தாகலாம். முரண்படாமல் இணைந்தால் அக்குழந்தை அவதார புருஷராகவும் ஆகலாம்.




(அருள்தந்தையின் பதில்கள் என்ற நூலிலிருந்து)

# அருள்வாக்கு



## ஆத்மாவிடமிருந்தே ஆனந்தம்!

ஆனந்தம் என்று நாம் சொல்வதே ஆத்மாவின் ஸ்வரூப லக்ஷணந்தான். ஒரு குடத்துக்குள் இருக்கிற தீபத்தின் ப்ரகாசத்தைத் துளித்துளி அதிலுள்ள சின்ன துவாரங்களின் மூலம் கிரணமாகப் பெற்று, இந்தக் கிரண ஸ்பர்சத்திலேயே லவலேசம் ஒளிபெறுகிற வஸ்துக்கள், 'அந்தத் தீபத்துக்கு ப்ரகாசம் இருக்கா, இல்லியா?' என்று கேட்டால் எப்படி இருக்கும்? அப்படித்தான் புலன்களால் ஏதோ கொஞ்சம் எப்போதோ ஆனந்தம் காண்கிற நாம் ஆத்துமாவுக்குக் கேவல ஸ்திதியில் ஆனந்தம் உண்டா என்று கேட்பதும்.

நாய் என்ன பண்ணுமென்றால், அது ஒரு காய்ந்துபோன எலும்புத் துண்டைப் பார்த்தால் அதிலே என்றைக்கோ ஒட்டிக் கொண்டிருந்த மாம்ஸ வாடை இருப்பதை முன்னிட்டு அதைப் போட்டுக் கடிக்க ஆரம்பிக்கும். நாய் ஆஹாரம் பண்ணுவதற்கு அந்த எலும்பிலிருந்து ஒரு ஸத்தும் வராது; ஆனால், அது நாயின் வாயில் குத்தி இந்த நாயின் ரத்தமே வெளிவர ஆரம்பிக்கும். அறிவில்லாமல் அந்த நாய் எலும்பிலிருந்தே ரத்தம் வருவதாக நினைத்து ஸந்தோஷப்பட்டுக் கொண்டு, அதை மேலும் மேலும் கடித்துத் தன் வாயை மேலும் மேலும் ரணமாக்கிக் கொண்டு, அதிலிருந்து வடிகிற தன் ரத்தத்தையே குடித்து ஆனந்தப்படும். இப்படித்தான் வெளி வஸ்துக்களின் அநுபோகத்தில் நாம் பெறும் ஆனந்தமென்பது அந்த வெளி வஸ்துக்கள் தருவதல்ல. நாயின் வாய் ரத்தம் போல நம் இந்த்ரியங்களிலேயே உள்ள ஆனந்தம் தான் அது. ஆத்மாவாக மட்டும் இருந்துகொண்டு அந்தப் பூர்ணானந்தத்தில் நிறைந்திருக்காமல், இந்த்ரியத்தினால் ஆனந்தம் என்று நாம் நினைக்கிறோம்; இந்த ஆனந்தமும் இந்த்ரியங்களின் அநுபோகத்துக்கான விஷயங்களிலிருந்து (object-களிலிருந்து) வருவதாக வேறு நினைக்கிறோம்! ஆனந்தம் 'தன்னது'தான், subjective -தான்; வெளி வஸ்துவிலிருந்து வரும் ஸமாசாரம் அல்ல. நிஜமான 'தானும்' ஆத்மாதான்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்




மயங்கிக் கிடக்கிறாளா அல்லது விழித்துத்தான் இருக்கிறாளா என்று சொல்ல முடியவில்லை; இலேசாக வாயைத் திறந்தபடியே ஒரு பக்கமாகத் தலையைச் சாய்த்திருக்கிறாள்; ஜன்னல் கம்பிகளில் தலை சற்றைக்கொருதரம் இடிபடுவதைப் பற்றிய லட்சியம் ஏதுமின்றி, சன்னமான விசும்பலுடனும் காயாத கண்ணீர்க் கோடுகளுடனும்... பாவம், வயதானவள்; அறுபதுக்கு மேலிருக்கும் நிச்சயமாய்...

கூட இருந்த பெரியவரும் அப்படியே! பேச்சில்லை; ஓரிருமுறை இருமியதோடு சரி! வழியில், ஓரிடத்தில் வண்டியை விலகித் தள்ளி நிறுத்தச் சொல்லி, இறங்கிப் போய், ஒரு மினரல் வாட்டர் பாட்டிலும், அவளுக்காக

ஒரு குளிர்பானமும் வாங்கி வந்தார்.

தண்ணீரால் முகம் கழுவிய கையோடு, சின்ன மருந்துக் குப்பியைத் திறந்து ஒரு மாத்திரையை எடுத்து அவசரமாய் நாக்கடியில் திணித்துக் கொண்டார். வண்டி புறப்பட்டதும் மீண்டும் விட்ட இடத்திலிருந்து ''சிவ, சிவ'' இடையில் திடீரென்று வந்து விழுகின்ற, ஒரு வேகமான ''சிவசிவ''வும், எதையோ பொறுக்க மாட்டாதவராய்த் தலையை அடிக்கடி உலுக்கிக் கொள்வதும் அவர் பெருந்தவிப்போடு இருப்பதை உணர முடிந்தது. குறிப்பாய், சிவந்து இடுங்கிய அந்தக் கண்களில் தெரிவது வெறும் சோகம் என்று மட்டும் தோணவில்லை பெருமாளுக்கு!

இன்னும் நாற்பது கி.மீ.தான். 'ஏக் தம்மில்', ஒரே அழுத்தமாய் அழுத்திக் கொண்டு சேர்ந்து விடலாம்; மனசுக்குள் கணக்குப் போட்டு வண்டியின் வேகம் கூட்டினான் பெருமாள்.

# ரோஷினி



வீட்டுக்கு வந்த புள்ளையாம்ப்பா! பெத்தவங்க வேலைக்குப் போறவங்க... புள்ள, சாயங்காலம் ஏழு மணி வரைக்கும் ஒண்டியாத்தானே இருக்கு? பாவம்ன்னுட்டு, ''நாங்க ரெண்டு பேரும் சும்மாத்தான இருக்கோம்? அவனுக்குன்னு என்ன தனி உலையா வைக்கப் போவுது?ன்னு சொல்லித் தாத்தாக்காரர்தான் சண்டை போட்டு அழச்சிட்டு வந்தாராம் புள்ளையை! விதி...ம்!''

காலம், இருந்திருந்து, இந்த எழுபது வயசுக்கு மேல், அவர் தலையில் தீராதத் தீயை அள்ளிப் போட்டிருக்கிறது. வேறென்ன?

# புனிதப் பயணம்

சைக்கிளில் நண்பர்களுடன் சேர்ந்து ட்யூஷன் போனவனாம்; ரெண்டாவது நாளில் லாரிக்காரன் கண்மண் தெரியாமல் திரும்பியிருக்கிறான். மூன்று நாட்களாக ஆஸ்பத்திரி வாசம்; செயற்கை சுவாசம்; இன்று காலையோடு அதுவும் கூட முடிந்து போனது!

ரிசப்ஷனிஸ்ட் அம்பிகா சொல்லிக் கொண்டிருந்தாள், ''படிப்புக்காகத் தாத்தா

முதல் நாள் சாவியைக் கையில் கொடுக்கும் போதே, சூப்பர்வைஸர் சொல்லி விட்டார். ''தண்ணி போடாதே; சிகரெட்டுப் புடிக்காதே; இஷ்டத்துக்கு லீவு சொல்லாதே. இது எல்லா டிரைவருக்கும் உள்ளதுதான் பெருமாளு!

ஆனால், ஆம்புலன்ஸ் வண்டி ஸ்டீரிங்கப் புடிக்கிறவனுக்கு இன்னொன்னும் உண்டு. 'சென்டிமெண்ட்' கிடையாது. அந்தக் கிருஷ்ண பரமாத்மா வாட்டம் 'ஒ-ர்-ரே மனசோட' வேலை பாக்கணும்; கேட்டியா? வண்டி ஓட்டுறதுக்கு மட்டும்தான் நீ பொறுப்பாளி; வேறயெதுக்கும் கிடையாது. பொழச்சாலும் சரி... போனாலும் சரி! அதுக்குன்னு இந்த வேலையாப் போச்சேன்னும் சொணங்கிடாதே! என்ன?''

தலையாட்டி வைத்தான். பூம்பூம் மாடாட்டம்.

சாப்பாடு, தண்ணி, தூக்கம் போல - துக்கமும் கூட வாழ்க்கையில் நித்திய நியதியாகிப் போகுமென்று அவன் அறிந்திருக்கவில்லை அப்போது!

பயமாயிருக்கிறது இப்போது. வரவர, புத்தி எதையும் சாவோடே சிந்தித்துப் பார்க்கிறது; வாழ்க்கையின் வண்ணமே சோகமும், சோகம் சார்ந்ததாகவும்...

சூப்பர்வைஸரும் ரிசப்ஷனிஸ்ட்டும் கண்ணயர்கிற நேரத்தில், கந்தசாமி வாட்ச் மேன், அவனிடம் வருவார்; பேச, தூக்கத்தை விரட்ட... எதிலெதிலோ மோதி, பேச்சு, ஒருநாள் இவனிடமே திரும்பியது: ''நீ போகயில உன் எதிர்க்கப் பொணம் வாது 'அவ்வளவு' நல்ல சகுனம் பெருமாளு!''

''ப்ச்! தாத்தா, செத்த சும்மாயிருக்கியா?''

''நெசந்தான்டாண்ணா...''

''என்னா நெசம்? பொணத்துக் கூடவே வாது? பொழுது விடிஞ்சு, பொழுது போனா ரெத்தத்தையும் சாவையுமே தூக்கிக்கிட்டு அலையறது? இதெல்லாம் அப்ப 'ரொம்ப, ரொம்ப' நல்ல சகுனமா? ம்? சொல்லு தாத்தா? அப்பண்ணா, நான் ரொம்ப நல்லாயிருக் கேன்றியா?'' பொங்கினான் பெருமாள்.

தன் உதட்டுப் பீடி வெளிச்சத்தில் இவனைப் பார்த்தவர், அவன் கண்களில் தெரிந்த வருத்தத்தை, சோகத்தை, உள்ளிருந்துக் கிறிக் கிறி அவனைத் தினம் ரணப்படுத்திக் கொண்டிருந்த ஒன்று வெகு சீற்றமாய் வெளிவருவதைச் சட்டென்று புரிந்து கொண் டார்!

''டேய், பெருமாளு! நீயென்னத் திருடுறியா? வறண்டுறியா? ஒண்ணுக்குப் பத்தா வச்சு ஏய்ச்சிப் பொழைக்கிறியா? ஏண்டா மனசைப் போட்டு அலட்டிக்கிற? ஹூம்! தெய்வம் உனக்குன்னு காமிச்சிருக்கு? என்ன பண்றது? எல்லாருமே பல்லாக்குலப் போகணும்னாத் தூக்குறது யாரு? சொல்லு?''

அவர் ஏதோ தத்துவார்த்தமாகச் சொன்ன போது கூட, அவனுக்குத் திடுமென்று, தொலைக்காட்சியில் பார்த்த 'அகோரிகளின்' ஞாபகம் வந்துவிட்டது!

மூன்று முறை, பத்தாம் கிளாசில் 'கோட் டடித்தப் பெருமை' அவனுடையது! இந்தப் பெரிய ஆஸ்பத்திரியின் உள்ளே 'நுழைய முடிந்ததே' போன ஜென்மத்துப் புண்ணிய பலன்! வேலை மீது அருவை வரும்போதெல் லாம் எதிர்கால பயம் பின்னுக்குத் தள்ளிவிடும்- எப்போதுமே!

ஆனாலும், அறிமுகப்படலம் தொடங்கி வாடகைக்கு வீடு தேடுவது வரை... எல்லாச் சமயத்திலும் எதிர்கொள்ளத்தான் வேண்டி யிருக்கிறது. ஒரு சின்ன அருவையை, நாசூக் கான விலகலை... ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது, தோளில் கைபோடத்



தயங்கும் தோழமையை. அப்போதெல்லாம், 'குபுக்'கென்று நெஞ்சில் பாய்ந்தேறிக் கொள்கிற ஒன்றை என்ன செய்வதென்றுதான் தெரிய வில்லை! அதிலும் குறிப்பாய், இதுபோன்ற சிறு பிள்ளைகளின் மரணம் என்றாலோ, ஒரு வாரத்திற்கு ஒன்றும் புரி படாது பெருமாளுக்கு! தூக்கம் தொலைந்து போகும்; கண்மூடித்தன மான கோபமும், சோகமும் துரத்தும். கடவுள் மீதும், கண்டவர் மீதும்... ''இவ்வளோ பெரிய உலகத்துல உனக்கு வேற யாருமேவா ஆப்புடல?'' என மனசு பரபரக்கும்; பதறும்; எத்தனையோ முறை, கையில் எடுத்துவிட்ட

விபூதியைப் பூசிக்கொள்ள மனமின்றி, விசிறி விட்டு வந்திருக்கிறான்! 'எப்ப வருவாள்? எப்ப வருவாள்?' என்று பார்த்திருந்து, மகள் ரம்யா உள்ளே நுழைந்ததும், பாய்ந்து, புத்தகப் பையைப் பிடுங்கி வீசி, அவளை மடியில் உட்கார்த்தியபடி ஏதேதோ யோசனைகளில் தொலைந்து போயிருக்கிறான்.

அது ஒரு ஜனவரி; புது வருஷத்தின் முதல் அழைப்பு! பைப்பாஸில் விபத்து; தகவலே - தாமதம்தான்! நிறைய ரத்தச் சேதம்! அடிபட்டவன் குடித்துத் தொலைத்திருந்தான் போலும். மிக முயன்றும் தோற்றுப் போனார்கள்!

ஆனால், அடிபட்டவனின் அப்பா, அவனைத் தேடி வந்து ஓங்கி அறைந்தார். ''அடிபட்டு, ஒன்றரை மணி நேரம் கழிச்ச ஆடம்பரமா வந்தியே?... போனியா? பாவி! உன்னாலதாண்டா!'' என்று அவன் சட்டையைப் பிடித்து உலுக்கி, வசவை வாரியிறைத்த போது, அவன் முற்றிலும் தளர்ந்து போனது நிஜம்!

## அவர்களும் இவர்களும்!

**இயக்குநர் அகத்தியன் நடிகராக அறிமுகமாக, எழுத்தாளர் வீரபாண்டியன் இயக்கும் படம் 'அவர்களும் இவர்களும்'. ''சாதி பிரச்னைக்கு காதல் எப்படித் தீர்வாகிறது என்பதுதான் படத்தின் மையச் சரடு'' என்கிற வீரபாண்டியன், இரண்டு கவிதைத் தொகுப்புகளையும் வெளியிட்டவர். தங்கர்பச்சான் பட்டறையில் உருவான சதீஷ் கதாநாயகனாக நடிக்க, 'மானாட மயிலாட' நிகழ்ச்சியில் முதல் பரிசுப் பெற்ற ஐஸ்வர்யா கதாநாயகியாக நடிக்கிறார். தமிழ்நாடு கால்பந்தாட்ட அணியின் முன்னாள் கேப்டன் சீ.காமராஜ் லக்ஷிகா நிறுவனத்துக்காக இப்படத்தைத் தயாரிக்கிறார்.**

''கடவுளே இந்த வேலை வேணாம் போதும்! என்னை விட்டு விடு...'' மன்றாடினான். சூப்பர்வைஸரிடம் சொன்னபோது மசியவில்லை. ''திடீர்னு சொன்னா எப்படிப்பா பெருமாளு? இதப் போயி பெருசு பண்றியே? இந்தக் காலத்துல டாக்டருங்களையே இழுத்துப் போட்டுப் பெரட்டிடுறாங்க ஜனங்க. ம்...ம்? ஒண்ணு செய்யேன்; நீவேணா, ஒரு ரெண்டு நாளைக்கு லீவு எடுத்துக்க!'' எனப் பெரிய மனத்துடன் சொன்னார்! பெருமாள் நகராமல் நின்றதைக் கண்டதும், ''அட, என்ன பாக்குற? இந்த ரெண்டு நாளே நீ இல்லாட்டிப் போனாச் சங்கடம்யா...''

பாராட்டுதலா? தேற்றுதலா? வரமா? சாபமா? என்னவென்று புரியாமல்தான் தேரோட்டுகிறான் பெருமாளு, ஆறு வருஷமாக...

இதெல்லாம் கூடப் பெரிதில்லை; பொண்டாட்டியே சில சமயத்தில் ஏதாவது குத்தலாய்ச் சொல்லிடும்போது அவன் சரிந்து போகிறான். ஒரேயடியாய் விழுந்து போகிறான்.

ஏதேதோ நினைவுகள்...

தூரத்தில் சாலையோரம் தன் பேரனின் படம் போட்டக் கண்ணீர் அஞ்சலி பேனர்களைக் கண்ட மாத்திரத்தில் அந்தப் பெரியவரின் மூக்கு விடைத்துச் சிவந்தது. புஸ்புஸ்வென்று பெரிதாய்க் கிளம்பியது அழுகை. ஒரு மொடக்குத் தண்ணீர்க் குடித்து மீண்டும் ஒரு மாத்திரையை நாக்குக்கு அடியில் திணித்துக் கொண்டார்; இதற்குள் அந்த அம்மாள் பெருங்குரலில் கதறத் தொடங்கினாள்.

மஞ்சள் பெயிண்ட் அடித்த வீடு; அதன் அவசர ஷாமியானாவிற்குள் வண்டி நுழைந்தது; நிறுத்திய அதே நொடியில், அலங்க மலங்க இறங்கிய பெரியவரைப் பாய்ந்து எதிர்கொண்டவன்தான் அவர் மகனாயிருக்க வேண்டும்.

'உங்கள நம்பித்தானே விட்டேன்? ஏம்பா இப்படி வாரிக் கொடுத்தீங்க?'' என்று அவன், அவர் சட்டையைப் பற்றி உலுக்கினான். பெரியவர் ஸ்தம்பித்துப் போனார்; இடுங்கிப் போய்க் கிடந்த அந்தக் கண்கள், அதிர்ச்சியில் பெரிதாய் விரிந்து பயத்தையும், குற்றவுணர்வையும் கொட்டித் தீர்த்தன; சட்டென்று, மகனின் கைகளைத் தன் கைகளால் இழுத்துத்




''எனக்குள்ளே ஒரு மிருகம் தூங்கிக்கிட்டிருக்கு. அனா வசியமாத் தட்டி எழுப்பிடாதீங்க!''

''அடப்பாவி! நீதான் முழு சோம்பேறின்னு நினைச்சா உனக்குள் இருக்கிற மிருகத்தையும் சோம்பேறியாக்கி வச்சிருக்கியே?''

- எஸ்.கோபாலன்

தன் தலையிலும் நெஞ்சிலுமாக அறைந்து கொண்டார்!

'ஐயோ' என்றிருந்தது பெருமாளுக்கு; இப்பேர்ப்பட்ட சூழ்நிலையிலும் தனக்காகக் கூல்டிரிங்க்ஸ் வாங்கிய அவர் கரிசனமா? 'சிவசிவ'வென்று பயணம் முழுதும் கூடவே வந்த அந்த ஒப்வொழிச்சலில்லாத அரற்றலா? அவர் கண்ணில் அலையாடிக் கொண்டிருந்த துக்கம் தாண்டிய இன்னொன்றா?

ஒருகணம், என்ன செய்கிறோம் என்பதன் தீவிரம் அறியாமல், பெருமாள் பாய்ந்து அவர் பிள்ளையின் பிடியிலிருந்து பெரியவரை விடுவித்தான். ''பாவம், நெஞ்சு வலிக்காரர் வேறு!'' என்ற நினைப்பில்...

ஆனால், அடுத்த கணம், மிகக் கொடுமையானது. ''ஏய்! இவனை செட்டில் பண்ணி அனுப்பு!'' என்று யாரையோ ஏவினான் பிள்ளை. பெரியவரின் பார்வையிலும் கூடப் பட்டென்று ஒரு வித்தியாசம்; புறக்கணிப்பு! இதென்ன அதிகப்பிரசங்கித்தனம் என்பதான ஒன்று! பெருமாள் தன்னைத் தொட்டு அழுக்காக்கியதைச் சரிசெய்வது போல் வெடுக்கென்று ஒருமுறை தன் உடம்பை உதறிக் கொண்டார்!

ப்ச்! பழக்கப்பட்டதுதான்! பெருமாள் சமாளித்துக் கொண்டான்! மௌனமாய் ஒருகணம், கிடத்தப்பட்டிருந்த அந்தப் பையனின் முகத்தைப் பார்த்துவிட்டு வெளியேறினான்.

வழியில் ஒரு மோட்டார் கொட்டகையில் நிறுத்தி, வண்டியைக் கழுவிய பின், தானும் குளித்தான்; வெறும் குளிப்பென்ன செய்யும் இத்தனை புழுக்கத்தை? யோசித்துப் பார்த்த போது, 'வண்டி ஏறியது தொட்டு இந்த நிமிஷம் வரை, தான் யாரிடமும், இன்னமும், என்னி ஒரு வார்த்தை கூடப் பேசவேயில்லை' என்கிற நிஜம் தீயாய்ச் சுட்டது; பசி வந்த வேகத்தில் மரத்துப் போனது!

அம்மாவின் குரல் கேட்கவேணும் போலிருந்தது. அம்மாவுக்கு ஃபோன் அடித்தான். மறுமுனையில் அவள், ''நா...னே, உன்னைக் கூப்பிடணும்னு இருந்தேன்...ய்யா'' என்ற போது தண்ணென்றிருந்தது.

''சொல்லும்மா...''

''நம்ம கீழத் தெரு நல்லகண்ணு மவன்.. புத்திகெட்டுப் போயி மருந்தக் குடிச்சிட்டான். நெலமை ரொம்ப மோசமாயிட்டுப்பா. பாவம், அவங்க அம்மாக்காரி மட்டும் தனியா என்ன பண்ணுவான்னு நானும் கூடவே போனேன்யா. பாதி வழியிலேயே 'தீந்து போச்சு!' எஞ்சாமி அந்த வண்டிலயே அந்தப் புள்ளையோட திரும்பி ஊடு வர்ற வரைக்கும் என் மனசும் உடம்பும் பட்ட பாடு. என்னை உடு. வயசுப் புள்ள நீ; நெனப்படிக்கும் 'இதயே' எப்படிப்பா?... நீ வந்துருய்யா... நெதம் ஐய்யாவும் பதஷ்ட்டமுமா வேலைக்குப் போனின்னாக்கா, காசு வரும்; நிம்மதி வருமாய்யா? போவட்டும்! இந்தச் சாமி மலைல ஒரு பூக்கடை வைச்சாவது பொழச்சிக்கலாம்! சொன்னாக் கேளுப்பா!'' குரல் கரகரத்துத் தேயத் தேய வார்த்தைகளுக்காகத் தடுமாறினாள்!

காத்திருந்தவன் போல பொதுத் தொலைபேசியென்றும் பாராமல், 'ஓ'வென்று உடைந்து, கண்ணீரில் கரையத் தொடங்கினான் பெருமாள்! ■

கல்வெட்டுகள்



# மனிதத் தன்மைக்கு அறிகுறி!

பழைய நண்பர்களான ராஜாஜியும் ராமசாமியாரும் பொது மேடையில் சந்தித்துப் பதினாயிரக் கணக்கான மக்களின் முன்னிலையில் கை குலுக்கினார்கள்; அளவளாவிப் பேசினார்கள்; ஒருவரையொருவர் பாராட்டினார்கள்.

பெரியார் நாயக்கர் இப்பொதுக் கூட்டத்தில் ராஜாஜி அவர்களுக்குப் 'பெரியார் ஆச்சாரியார்' என்ற பட்டத்தையும் சூட்டினார்.

இரு பெரியவர்களும் இவ்விதம் ஒரே மேடையில் சந்தித்து அளவளாவிப் பாராட்டிக் கொண்ட காட்சியைக் கண்டு அம்மாபெருங் கூட்டத்தில் கூடியிருந்த பொதுமக்கள், சூரியனையும் சந்திரனையும் ஒரே சமயத்தில் வானத்தில் கண்ட சமுத்திரம்போல் ஆரவாரித்தார்கள். பலவிதங்களில் தங்கள் மகிழ்ச்சியைப் புலப்படுத்திக் கொண்டார்கள்.

''உங்களைப் பார்ப்பதற்குத்தான் இவ்வளவு பெரிய ஜனக்கூட்டம் கூடியிருக்கிறது!'' என்றார் பெரியார் நாயக்கர்.

''இல்லை! நம் இருவரையும் சேர்ந்து பார்ப்பதற்காகவே இவ்வளவு பெரிய கூட்டம்!'' என்றார் பெரியார் ஆச்சாரியார்.

''வேறு பேச்சு எதற்காக? நாங்கள் இருவரும் சேர்ந்து இம்மேடையில் உட்கார்ந்திருப்பதே மிகப் பெரிய பிரசங்கத்துக்குச் சமமானது'' என்றார்.

ஸ்ரீ நாயக்கரோ, ''ஆச்சாரியார் இக்கூட்டத்துக்கு வரப் போகிறார் என்று தெரிந்ததும், எனக்கு உடம்பு சரியா இல்லாவிட்டாலும் இக்கூட்டத்துக்கு வந்தே தீருவது என்று வந்தேன். வைத்தியர்களின் யோசனையைப் புறக்கணித்துவிட்டு வந்தேன். நாங்கள் இருவரும் சேர்ந்து இம் மேடையில் தோன்றுவது மனிதத் தன்மைக்கு அறிகுறி. அவ்வளவுதான்!'' என்று கூறினார்.

பெரியார் நாயக்கரும் பெரியார் ராஜாஜியும் ஒரே மேடையில் தோன்றியதையும், கைகுலுக்கியதையும் கண்டு மக்கள் அவ்வளவு குதூகலம் அடைந்த காரணம் என்ன?

இனத் துவேஷ வகுப்புத் துவேஷப் பிரசாரங்களையோ, உத்தியோகப் போட்டி - பதவிப் பற்றுக் காரணமான பூசல்களையோ, சொந்த விருப்பு, வெறுப்புக் காரணமான மாத்சரியங்களையோ, ஆவேச மேடைப் பிரசங்கங்களின் வசை புராணங்களையோ தமிழ் மக்கள் விரும்பவே இல்லை.

கருத்து வேற்றுமை இருக்க முடியாத காரியங்களிலாவது தலைவர்கள் சிநேக பாவம் காட்டி நடந்து கொள்ள வேண்டும் என்றும், இதன் மூலமாக மனிதத் தன்மையை வளர்க்க வேண்டும் என்றும் ஆசைப்படுகிறார்கள்.

தமிழ் மக்களின் உண்மையான உள்ளம் இதுதான் என்பதைப்பற்றி நமக்கு எப்போதும் சந்தேகம் இருந்ததில்லை.

- கல்கி 27.12.1953

# சொற்களின் தாக்குதலின் பொழுது...

கல்மூங்கில் மரத்தைப்போல
வளர்த்து வைத்திருக்கிறேன்
உடலை

மொத்தமாய்
மூன்றுபேரை
அடித்துத் துவைத்திருக்கிறது
அது

இரும்புச் சக்கரங்களோடும்
குண்டுகளோடும்
நட்புண்டு அதற்கு

தரைத் தளத்திலிருந்து
இரண்டாவது தளத்திற்கு
குறுகிய படிக்கட்டுகளின்வழியே
இரண்டிரண்டு குடங்களாய்
இடைவெளியின்றி
இருபது நடைகளில்
நாற்பது குடம் தண்ணீர்
எடுக்க முடியும் அதனால்

பேருந்து நுழையாத
சிற்றூரில் பிறந்த அது
பல மைல்கள் தாண்டி
பள்ளிக்குப் போன பழக்கத்தால்
காசில்லாத பொழுதில்
திருவல்லிக்கேணியிலிருந்து
கோடம்பாக்கம்
நடந்தேபோகிறது

அதன் திடகாத்திரம் குறித்துச்
சொல்ல
இன்னுமிருக்கிறது

இத்தனை சமாளிக்க முடிந்த அதனால்
சொற்களின் தாக்குதலின்
பொழுது மட்டும்
மரவட்டையாய் குறுகிப்போகிறது
வேர்பெயர்ந்த மரமாய்
சரிந்து விழுகிறது
பெரியதொரு பலவீனத்தோடு.

- முத்துவேல்

மழை விட்ட
மூன்றாம் நாள்,
அந்த கிணற்றில்
மீண்டும் தெரிகிறது
முதல் இலை!

- ஜா.பிராங்க்ளின் குமார்

வாசகர்களே! உங்க க்யூட் கவிதைகளைச்
சீக்கிரமா 'கவிதை கஃபே'ன்னு குறிப்பிட்டு அனுப்புங்க...
kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.

தொடர்பிலிருந்து நீ
விலகிச் செல்லும்
ஒவ்வொரு முறையும்
பிறிதொரு மார்க்கத்தில்
உன்னை
பின்தொடர யத்தனிக்கும்
வேளையில்
நீயாகவே அழைத்துப் பேசி
தொடரச் செய்கிறாய்
இந்த விளையாட்டை
இன்னுமோர் முறையும்.

\- செல்வராஜ் ஜெகதீசன்

மழை பொய்த்த
மாநிலத்தின்
மழலையர்ப் பள்ளியிலும்
சத்தமாய்ப் பாடினார்கள்
''ரெயின் ரெயின் கோ
அவே...!''

\- புதுவைப் பிரபா



''ஒரு குழந்தையாகவே
உன்னை விட்டு
வைக்கலாம் காலம்' என்றேன்.
'போப்பா... நீங்க
இன்னும் வளரவே இல்லை'
என்றாள் அவள்.

\- ரிஷபன்

# அறுபது லட்சம் உயில்கள்!

செல்வச் செழிப்பான இங்கிலாந்தின் ஏழைமையைத் தம் நாவல்களில் வெளிச்சம் போட்டுக் காட்டிய சார்லஸ் டிக்கன்ஸ், தம் மனைவி, குழந்தைகளுக்கு என்ன விட்டுச் சென்றார்? பரிணாமக் கொள்கையின் தந்தையான சார்லஸ் டார்வின் இறக்கும்போது கையில் எவ்வளவு பணம் வைத்திருந்தார்? அண்டார்டிகாவுக்குக் கடலில் பயணம் மேற்கொண்ட ஷாக்கல்டன் உயில் எழுதியிருந்தாரா?

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுதப்பட்ட கிட்டத்தட்ட அறுபது லட்சம் உயில்கள் முதல் முறையாக மக்கள் பார்வைக்கு வந்துள்ளன. எழுத்தாளர்கள், அரசியல்வாதிகள், தொழிலதிபர்கள், அறிவியல் விஞ்ஞானிகள் என்று புகழ்பெற்ற



● கார்ல் மார்க்ஸ்



● சார்லஸ் டார்வின்



பல்வேறு மனிதர்களின் உயில்கள் Ancestry.co.uk என்னும் இணையதளத்தில் தொகுக்கப்பட்டுள்ளன.

இது ஒரு சுவாரஸ்யமான வலைத்தளம். 1837ம் ஆண்டில் இருந்து 2005ம் ஆண்டு வரை இங்கிலாந்தில் பிறந்தவர்கள், இறந்தவர்கள், திருமணம் செய்து கொண்டவர்கள் பற்றிய முழுமையானத் தகவல்கள் இந்தத் தளத்தில் சேகரிக்கப்பட்டுள்ளன. கூடுதலாக, மக்கள் தொகைக் கணக்கெடுப்புப் பற்றிய புள்ளி விவரங்கள், வாக்காளர் பட்டியல், ராணுவப் பணியாளர்கள் பற்றிய குறிப்புகள், பள்ளிகள், தேவாலயங்கள் பற்றிய செய்திகள் என்று இங்கிலாந்து பற்றிய ஒரு முழுமையான என்சைக்ளோபீடியாவாக இது இருக்கிறது.

ஒரு மருத்துவராக, தன் வாழ்க்கையைத் தொடங்கிய ஆர்தர் கானன், வருமானம் கிடைக்காததால் கதை எழுத ஆரம்பித்தார். உலகப் புகழ் பெற்ற ஷெர்லக் ஹோம்ஸ் என்னும் துப்பறிவாளரை அறிமுகம் செய்தபோது, ராயல்டி குவிய ஆரம்பித்தது. தன் மனைவிக்கும் குழந்தைகளுக்குமாக இவர் விட்டுச் சென்றது, இன்றைய மதிப்பில் 3 மில்லியன் பவுண்ட்.

கடல் பயணம் மேற்கொள்ளாத போதெல்லாம் பணத்தைப் பற்றியே அதிகம்

சிந்தித்திருக்கிறார் ஷாக்கல்டன். அடுத்த முப்பது நாட்களில் மில்லியனராகிவிடலாம் என்று கிட்டத்தட்ட ஒவ்வொரு மாதமும் கனவு கண்டிருக்கிறார். அண்டார்டிகாவுக்குக் கடல் பயணம் மேற்கொண்ட ஷாக்கல்டன், தன் சாகசப் பயணத்தை நிறைவு செய்வதற்கு முன்பே மாரடைப்பால் இறந்து போனார். அப்போது அவருக்கு இன்றைய மதிப்பில் ஒன்றரை மில்லியன் பவுண்ட் கடன் இருந்தது.

டி.ஹெச். லாரன்ஸுக்கு அவர் இறக்கும் தருவாயில்தான் ராயல்டி அதிகம் வர ஆரம்பித்தது என்பதால் தம் குடும்பத்தினருக்கு அதிகம் விட்டுச் செல்லவில்லை. ஆனால், சார்லஸ் டிக்கன்ஸுக்கு அவர் வாழ்ந்த காலத்திலேயே நல்ல சம்பாத்தியம் வர ஆரம்பித்திருக்கிறது.




இன்றைய மதிப்பில் 7 மில்லியன் பவுண்ட் சொத்தைத் தம் குடும்பத்தினருக்கு அவர் விட்டுச் சென்றிருக்கிறார்.

பரிணாமக் கொள்கையை எடுத்துரைக்கும் தம்முடைய The Origin of Species புத்தகத்தை மிகுந்த் தயக்கத்துக்குப் பிறகு வெளியிட்டார் சார்லஸ் டார்வின். இறந்த போது, அவர் சொத்து மதிப்பு 13 மில்லியன் பவுண்ட்.

உங்களிடம் என்ன இருக்கிறது என்று பரிசோதனை அதிகாரி ஒருமுறை கேட்ட போது, என் அறிவைத் தவிர ஒன்றுமில்லை என்று சொன்னார் ஆஸ்கர் ஒயில்ட். 1900ல் இறந்தபோது இவருடைய சொத்து மதிப்பு அன்றைய தேதியில் 250 பவுண்ட் மட்டுமே. இப்போதைய மதிப்பு ஒன்பதாயிரத்து சொச்சம். (ஒரு பவுண்ட்டின் இன்றைய இந்திய மதிப்பு 73 ரூபாய்)

ஜெர்மனியில் இருந்து நாடு கடத்தப் பட்டதால், பிரான்ஸ் வழியாக பிரிட்டன் வந்து சேர்ந்தார் கார்ல் மார்க்ஸ். பொருளாதாரத் துறையில் அவருடைய முக்கியப் பங்களிப்பாக தாஸ் காபிட்டல் கருதப்படுகிறது. இதன் முதல் பாகம் 1867ல் வெளிவந்தபோது, மார்க்ஸுக்கு உலகக் கவனமும் புகழும் கிடைத்தது. ஆனால், வருமானம் இல்லை. தம் மகள், எலியனர் மார்க்ஸுக்கு அவரால் 250 பவுண்ட் மட்டுமே விட்டுச் செல்ல முடிந்தது.

'ஒருவர் எப்படி வாழ்ந்தார் என்பதை அவர் விட்டுச் செல்லும் உயில் மூலம் தெரிந்துகொள்ள முடியும். சமூக வரலாற்றை ஆய்வு செய்பவர்களுக்கு இந்தத் தகவல்கள் நிச்சயம் பயனளிக்கும்' என்கிறது ஆன்செஸ்ட்ரி இணையதளம். சரி... உங்கள் உயிலில் என்ன எழுதுவீர்கள்? ஏதேனும் உத்தேசம் இருக்கா?

மருதன்



''தலைவரே, உங்களுக்கு அருக லட்சம் ரூபாய்ச் செலவில் தொண்டர்கள் சிலை வைக்க விரும்புறாங்க.''

''நான் பணம் கொடுத்து ஒரு வருஷம் ஆச்சு. இன்னமும் பேசிக்கிட்டுத்தான் இருக்காங்களா?''

- என்.வி.ரமணி

''மனைவிக்குப் பயப்படறவன் முட்டாள், என்ன சொல்றீங்க?''

''என் மனைவியைக் கேக்காம நான் எதையும் சொல்ல முடியாது!''

-கோபி பச்சமுத்து



# நான் எதையும் சொல்ல முடியாது!





''தலைவருக்கு டாக்டர் பட்டம் கிடைச்சதிலேர்ந்து ரொம்ப மாறிட்டார்ன்னு எப்படிச் சொல்றே?''

''கூட்டணி பற்றிக் கேட்டாலும் இருபத்தி நாலு மணி நேரம் போனாத்தான் சொல்ல முடியும்ங்கிறாரே...''

- டி.சேகர்

''நேற்று ராத்திரி பெட்ரூம்ல தூங்கிக்கிட்டிருந்தப்போ திடீர்னு ஃபேன் கழண்டு என் மனைவி மேலே விழுந்திடுச்சு!''

''ஐய்யய்யோ... அப்புறம்?''

''அப்புறம் என்ன, ஹால்ல வந்து படுத்துத் தூங்கினேன்.''

- கு.கணேசன்






- திருத்துறைப்பூண்டி சேகர்



''தற்கொலை செஞ்சுக்கிற அளவுக்கு உன் கணவரிடம் என்ன சொன்னே?''

''ஏழு ஜென்மத்திற்கும் நீங்கதான் என் கணவர்ன்னு சொன்னேன்!''

- ராஜிராதா

# பலிச் பரிகாரம்



**ஏ.பிரபாகரன்,**

**மயிலாடுதுறை**

***நாங்கள் வசித்து வரும் வீட்டை விற்பனைச் செய்ய முயற்சி செய்கிறோம். எப்பொழுது விற்கும்? என்ன பரிகாரம் செய்ய வேண்டும்?***

அடுத்த வருடம் ஆவணி மாதத்திலிருந்து தை மாதத்திற்குள் வீடு விற்பனையாகிவிடும். சனிக்கிழமை தோறும் நவக்கிரக சந்நிதியில் அர்ச்சனைச் செய்யவும்.

**புலவர் இர்ாம.வேதநாயகம்,**

**திருவண்ணாமலை.**

***சந்திராஷ்டமம் என்பதன் விளக்கம் என்ன? அது எந்த நேரம்? அந்த நேரத்தில் செய்யும் வேலையின் நல்லது கெட்டது பற்றிச் சொல்லுங்களேன்?***

சந்திரன் ஒரு ராசியை கடக்க எடுத்துக் கொள்ளும் காலம் இரண்டே கால் நாட்கள். அவரவர் ராசிக்கு எட்டாமிடத்தை சந்திரன் கடந்து செல்லும் அந்த நாட்களை சந்திராஷ்டம நாட்கள் என்பர். ராசிக்கு எட்டாமிடத்தில் சந்திரன் இருக்கும் நேரங்களில் மனத்தை ஒருமுகப்படுத்துவது கடினம். மறதி அதிகமாக இருக்கும். பதற்றமான மனநிலை உள்ளவர்களாக இருப்பார்கள். ஆகவே, அத்தகைய நாட்களில் முக்கியமான விஷயங்களில் முடிவெடுப்பதைத் தவிர்க்க வேண்டும். பயணங்களையும் தவிர்ப்பது நல்லது. அது தீமை செய்யும் நேரம் அல்ல. ஆனால், நாம் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டிய நேரம்.

**ஆர்.நந்தகுமார், நென்மேலி.**

***ராகு தசை நடைபெறும்போது என்னென்ன நன்மை தீமைகள் நடைபெறும்? தீமைகளைத் தவிர்க்க நன்மைகளைப் பெருக்கிக் கொள்ள என்ன பரிகாரம் செய்ய வேண்டும்? எந்தத் தெய்வத்தை வழிபட வேண்டும்?***

ராகுவைப் போல் கொடுப்பார் இல்லை. கேதுவைப் போல் கெடுப்



**உங்கள் கேள்விகளை ஜாதகக்குறிப்போடு 'பலிச் பரிகாரம்' என்று குறிப்பிட்டு அனுப்புங்க...**

**kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.**

# துயர்தீர...!

ஹரிகேசநல்லூர் வெங்கட்ராமன்

பார் இல்லை என்று ஜோதிடப் பழமொழி ஒன்று உண்டு. செல்வச் செழிப்பை ராகு கொடுக்கும். நன்மையாக இருந்தாலும் தீமையாக இருந்தாலும் அதை மிகப் பெரிய அளவில் செய்வது ராகு. பொருளாதார ரீதியாக ஏற்படும் ஏற்றத்தாழ்வுகள் ராகு தசையில் சற்று அதிகமாக இருக்கும். ஆண்டியை அரசனாக்கும், அர சனை ஆண்டியாக்கும். ராகு-கேதுவிற்கு ராசிக்கட்டத்தில் சொந்த வீடு கிடையாது. எந்தக் கிரகத்தின் வீட்டில் அது உள்ளதோ அந்தக் கிரகம் செய்ய வேண்டியவற்றை ராகு செய்யும். ராகுவால் விளையும் நன்மைகள் - குறுகிய காலத்திற்குள் கோடீஸ்வரன் ஆக்குவது. ராகு கொடுக்கும் தீமைகள் - பழி, அவப்பெயர், சிறைவாசம், விஷக் கடி, தவறான மருந்துகளால் ஒவ்வாமை, முறைகேடாக பல திருமணம் நடத்தல், சூதாட்டத்தில் இழப்பு ஆகியவை.

**பரிகாரம் :**

ராகு தசை நடைபெற்றால் வணங்க வேண்டிய தெய்வம் துர்க்கை. பட்டீஸ்வரம் துர்க்கையை செவ்வாய்க்கிழமைகளில் சிவப்பு நிற மலர்கள் கொண்டு வழிபடவும். வழிபடும் நேரம் ராகு காலமாக இருக்க வேண்டும் என்னும் கட்டாயம் இல்லை. ஆனால் ராகு தசையில் நன்மை நடைபெற துர்க்கை வழிபாடு அவசியமாகும்.

**வி.ஜி.சத்யநாராயணன், நங்கநல்லூர்**

***ஒருவரின் ஜாதகத்தில் ஏழாம் இடமும், எட்டாமிடமும் அவர் வாழ்க்கையில் எதை நிர்ணயம் செய்கிறது?***

ஏழாம் இடத்தைக் கொண்டு வாழ்க்கைத் துணை, புகழ், கூட்டுத் தொழில், நண்பர்கள், பங்குதாரர்கள் ஆகியவற்றை அறியலாம். எட்டாம் இடம், அந்தரங்க வாழ்க்கை, கேரக்டர், ஆயுள், விபத்துகள், தோல்வி, வழக்குகள், அவமானம் ஆகியவற்றை நிர்ணயம் செய்கிறது. ●



எடுக்கும் அளவுக்கு துரோகிகளாவதுதான் படத்துக்கு வலு சேர்க்கும் எலிமெண்ட்'' என்கிற சுதா, ''உயிரைக் கொடுத்தார்களா... எடுத்தார்களா...? என்பதைத் திரையில் பாருங்கள். படத்தின் முக்கியமான ஹைலைட் சூப்பர் சுப்பராயனின் மகன் திலீப் சுப்பராயன் அமைத்திருக்கும் சண்டைக் காட்சிகள்தான்'' என்கிறார்.

# பயாஸ்கோப்

''எல்லோருமே, எல்லோருக்கும் ஒரு வகையில் துரோகிதான்'' என்கிறார் 'துரோகி' படத்தின் இயக்குநர் சுதா கே. பிரசாத். ஹீரோக்களாக ஸ்ரீகாந்த், விஷ்ணு நடிக்கின்றனர். ''இவர்கள்தான் படத்தின் வில்லன்களும் கூட. உயிரையே கொடுப்பேன் என்று நெருங்கிப் பழகும் இரு நண்பர்கள், உயிரை

'கனிமொழி' என்று தாம் தயாரிக்கும் படத்துக்குப் பெயர் வைத்து பரபரப்பைக் கிளப்பியது அம்மா கிரியேஷன்ஸ் என்பது பழையச் செய்தி. அம்மா கிரியேஷன்ஸ் நிறுவனத்தோடு இணைந்து கவர்ச்சி நடிகை சோனாவும் இப்படத்தைத் தயாரிக்கிறார். ஏற்கெனவே தங்க நகைக் கடை ஒன்றையும் நிர்வகித்து வரும் சோனா, அடுத்து 'பாக்யராஜ்' என்கிற படத்தையும் தயாரிக்கத் திட்டமிட்டுள்ளார். அனாதைக் குழந்தைகளுக்காகவும், வாழ்க்கையில் வழி தவறிய பெண்களுக்காகவும் அறக்கட்டளை ஒன்றையும் துவக்கியுள்ளார் சோனா.





''வழக்கமான முக்கோணக் காதல் கதைதான். ஆனால், எந்தக் கோணத்தில் யாரை நிறுத்துகிறோம் என்பதில்தான் சுவாரஸ்யப்படுத்தியிருக்கிறோம்,'' இப்படித்தான் பஞ்ச் வைத்துப் பேசுகிறார் 'உனக்காக என் காதல்' படத்தின் இயக்குநர் ஜெய்குமார். இயக்கம் மட்டுமல்லாது தயாரிப்புப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டிருக்கும் ஜெய்குமாரின் வாழ்க்கையில் நடந்த உண்மை சம்பவம்தான் இந்தப் படமாம். இசையமைக்கும் சஞ்சீவ் தர்ஷன் பாலிவுட்டின் யுவன் ஷங்கர் என்றழைக்கப்படுபவர்.

# நீயும் துரோகி; நானும் துரோகி!

நடிகர் நாசரை தெலுங்கில் அறிமுகப்படுத்திய ஏ.எஸ்.கிதாகிருஷ்ணன் நீண்ட இடைவெளிக்குப் பிறகு தமிழில் இயக்கும் படம் 'நிமிடங்கள்'. 'சலங்கை ஒலி', 'சிப்பிக்குள் முத்து' போன்ற பிரபல படங்களில் இயக்குநர் கே.விஸ்வநாதனின் உதவியாளர் இவர். நூற்றுக்கும் மேற்பட்ட விளம்பரப் படங்களை இயக்கியவர் கீதாகிருஷ்ணன். 'நிமிடங்கள்' படத்தில் 'நடித்தே தீருவேன்' என்று பரபரப்பான தெலுங்கு ஹீரோ 'சஷாங்', தனக்கு வந்த பத்து தெலுங்குப் பட வாய்ப்புகளையும் மறுத்துள்ளாராம். ''தீவிரவாதத்துக்கு எதிராகக் கிளர்ந்தெழும் தனிமனிதனின் உணர்வோட்டம்தான் படத்தின் மையச் சரடு'' என்கிறார் கீதா கிருஷ்ணன்.



மெல்லினத் தொடர்கதை 19

நாட்கள் யாருக்காகவும், எதற்காகவும் காத்திருப்பதில்லை. சக்கரம் உருள்வது போல் நாட்கள் உருண்டுக் கொண்டே இருக்கின்றன. வருணுக்குக் கட்டை அவிழ்த்தாயிற்று. அம்மா, அப்பாவுடன் எப்போதும் போல் சுமுகமாக இல்லை என்பதை வருணும், கார்த்திகாவும் எப்படியோ தெரிந்து வைத்திருந்தனர். ஆனால், அவர்களுக்குக் காரணம்தான் தெரியவில்லை. அதைப் பற்றி அம்மாவிடமோ, அப்பாவிடமோ கேட்பதற்குப் பயம். சில நாட்களில் தேர்வுகள் ஆரம்பமாக இருந்தன. அதனால், அவர்களது கவனம் முழுவதும் பாடங்களிலேயே இருந்தது. வருண் கூட



ள்ளிக்கூடத்தில் ஏற்பட்ட விபத்துக்குப் பிறகு, தானாகவே படிப்பில் கவனம் செலுத்த ஆரம்பித்திருந்தான்.

அக்னி நட்சத்திரம் துவங்க இன்னும் பல நாட்கள் இருந்தன. ஆனால், இப்போதே வெயில் கடுமையாக இருந்தது. மரங்களிலிருந்து இலைகள் உதிர ஆரம்பித்திருந்தன. சமையலறையில் மனோகரி ஆத்திரத்தோடு வேலை செய்து கொண்டிருந்தாள் என்பது பாத்திரங்களின் ஓசையிலிருந்தே தெரிந்தது. சமையல் வேலைக்கு ஆள் வைத்துக் கொள்ளலாம் என்று அவனும், பாப்பம்மாளும் பலமுறை சொல்லிப் பார்த்து விட்டார்கள். மனோகரி பிடிவாதமாக வேண்டாம் என்று மறுத்து விட்டாள்.

அன்று ஃபோனிலேயே மனோகரி அழுதபிறகு சம்பந்தம் மகளுடன் அதைப் பற்றிப் பேசுவதையே தவிர்த்து விட்டார். அதற்காக மீனாட்சியும், மனோகரும்



# வண்ணநிலவன்

கணவனைச் சத்தம் போட்டாள்.

''வேணுமின்னா மாப்பிள்ளைகிட்டே இன்னொரு தடவை பேசுதேன். எனக்கு மனோகரிகிட்டே பேச முடியலை. அவ அழ ஆரம்பிச்சிருதா... அவ போக்கிலேயே விட்டுப் பிடிக்க வேண்டியது தான்...''-என்றார் சம்பந்தம்.

''அவ அழுதாங்கிறதுக்காக விட்டுர முடியுமா? அதுக்குத் தான் இந்த ஃபோன் எழவைக் கெட்டி மாரடிக்கிறதுக்குப் பதிலா நேர்ல போயிட்டு வாங்கன்னு சொல்லுதேன்.''

''இது புருஷன் பொஞ்சாதி சமாச்சாரம். நாம எந்தளவுக்குத் தலையிட முடியும்?''

''நாளைக்கு அவ வாழாவெட்டியா வந்து நிக்கப் போறா...''

''அதெல்லாம் வர மாட்டா... ஏதோ மனக்கஷ்டத்திலே மனோகர்கிட்டே அப்பிடிப் பேசியிருக்கா.''

''ஆமா நெனைச்சுக்கிட்டு இரியுங்க...'' என்று கோபத்துடன் சொல்லிவிட்டுப் பின்புறம் போய் விட்டாள் மீனாட்சி.

# உள்ளும் புறமும்

அவரிடம் கோபித்துக் கொண்டார்கள்.

''ஃபோன் என்ன ஃபோன் வேண்டிக் கிடக்கு? இங்க என்ன வேலையை வெட்டி முறிச்சாகுதோ தெரியலை? அவ குடும்பத்தை விட்டே வரப் போறேன்னுட்டு இருக்கா. என்ன ஏதுன்னு ஒரு எட்டு மெட்ராஸுக்குப் போயி பார்த்துட்டு வந்தாத்தான் என்னவாம்...? பொழுதன்னைக்கும் இந்த ரூமே கதின்னு அடைஞ்சு கெடந்தா என்ன செய்ய முடியும்...?'' என்று மீனாட்சி

மீனாட்சியிடம் அப்படிப் பேசினாலும் அவருடைய மனம் மனோகரி விஷயத்தையே போட்டுக் குழப்பிக் கொண்டிருந்தது. மேஜை மீதிருந்த கைக் கடிகாரத்தை எடுத்து மணி பார்த்தார். மணி பதினொன்றரை ஆகிக் கொண்டிருந்தது. இப்போது

கிருஷ்ணபாரதி அலுவலகத்தில்தான் இருப்பான். அவனிடம் பேசலாமா என்று நினைத்தார். மொபைலை எடுத்து அவன் நம்பரைப் போட்டார். பின்னால் திரும்பி மீனாட்சி வருகிறாளா என்று பார்த்துக் கொண்டார்.

''சொல்லுங்க மாமா... எப்படி இருக்கீங்க? எல்லாரும் சௌக்யமா'' என்று கிருஷ்ணபாரதி கேட்டான்.

''எல்லோரும் சௌக்யந்தான் மாப்பிள்ளை... மனோகரி அப்படியேதான் இருக்கா... எனக்கும் என்ன செய்யறதுன்னு ஒண்ணும் பிடிபட மாட்டேங்குது...''

''நான் அவகிட்டே பேசினேன் மாப்பிள்ளை... அதைப் பத்திக் கேக்க ஆரம்பிச்சதுமே அழ ஆரம்பிச்சிட்டா... சரி, அவ பிள்ளைகளைக் கூட்டிக்கிட்டு இங்கே வாரதுன்னாலும் வரட்டும்.. உங்ககிட்டே அப்பா வீட்டுக்குப் போறேன்னு ஏதும் சொன்னாளா மாப்பிள்ளை?''

''அவ திருநெல்வேலிக்கு வரப் போறதே நீங்க சொல்லித்தான் மாமா எனக்குத் தெரியும்... அவதான் என்கிட்டே பேசறதே இல்லியே...''

''எனக்கும் மனோகர் சொல்லித்தா[illegible] தெரியும். அவங்கிட்டேதான் இங்கே[illegible] நிரந்தரமா வந்திரப் போறேன்னு சொல்[illegible]யிருக்கா... அவ அப்படியே அவ ப்ளா[illegible]படி பிள்ளைகளைக் கூட்டிட்டு இங்[illegible] வந்தா வரட்டும். நாங்க எல்லோரும் பே[illegible] அவளைச் சமாதானப்படுத்துறோம்...''

''பிள்ளைகளோட படிப்பு என்[illegible] ஆகுறது? அதுதான் மாமா எனக்குக் கவலையா இருக்கு...''

''முன்னூலே துணி மாட்டுன மாதிரி சமாச்சாரம் இது. மெள்ள மெள்ளத்தான் சிக்கலை எடுக்கணும். ஸ்கூல்ல டி.சி. வாங்கிராமப் பார்த்துக்கோங்க. ஜூன்லே தானே பள்ளிக்கூடம் திறக்கும். அதுக்குள்ளே அவளைச் சரிபண்ணி அனுப்பிடலாம்..''

''வேலையை என்ன பண்ணப் போறான்னு தெரியலை...'' என்றான் கிருஷ்ணபாரதி.

''அங்கே அவ ஆபீஸ்லேயும் அவளோட மேலதிகாரியைப் பார்த்து, விஷயத்தைச் சொல்லி ஜூன் மாதம் வரைக்கும் சம்பளம் இல்லாத லீவா ட்ரீட் பண்ணச் சொல்லிக் கேட்டுக்கிடுங்க... ஸ்கூல் பிரின்ஸ்பால்கிட்டேயும் சொல்லி வச்சிருங்க...''

''இவ்வளவு சிரமம் எல்லாம் எதுக்கு மாமா? இதெல்லாம் இவளுக்குத் தேவையா?''

''மாப்பிள்ளை சின்னப் பிள்ளைகள் எதையாவது கேட்டு முரண்டு பிடிக்கும் இல்லையா? அந்த மாதிரித்தான் இவ சமாச்சாரம் இருக்கு... அப்புறம் ஒரு விஷயம் மாப்பிள்ளை...''

''சொல்லுங்க மாமா...''

''கொஞ்சம் முரட்டு வைத்தியம்தான்... ஆனாலும் செஞ்சு பாக்கலாம்ன்னு தோணுது.

> **''ஏண்டா, எல்லாப் பாடத்திலேயும் பெயிலாட்டியே உங்க அம்மா அடிக்க மாட்டாங்களா?''**
>
> **''எங்க அப்பாவை மட்டும்தான் அடிப்பாங்க. என்னைத் தொடவே மாட்டாங்க.''**
>
> **- சங்கீத சரவணன்**



வேற ஒண்ணுமில்ல... உங்க ஃப்ரண்ட்... அதான் அந்தப் பெண்ணுரிமை பேசற பெண்ணையே விட்டு மனோகரிகிட்டே பேசச் சொல்லலாமான்னு தோணுது. நீங்க என்ன நெனைக்கிறீங்க...?''

''யாரு சுசீலாவையா?''

''ஆமா... அந்தப் பொண்ணே மனோகரி கிட்டே பேசி அவளோட சந்தேகத்தைத் தீர்த்துட்டா என்னன்னு தோணுது...?''

இதற்கு கிருஷ்ணபாரதி உடனே பதில் சொல்லவில்லை. கொஞ்சம் தயங்கினான். பிறகு, ''அவகிட்டே கேட்டுப் பார்க்கறேன்...'' என்றான்.



"இது அரசியல்வாதிகள் பண்ணுற குழப்பம் மாமா... அவங்க வோட்டுக்காக இப்படியெல்லாம் கூத்தடிக்கிறாங்க."

''அது, நீங்கள்ளாம் சொல்றதை வச்சு ரொம்ப முற்போக்கான பொண்ணுன்னு படுது. கண்டிப்பா ஒத்துக் கொள்வான்னு நெனைக்கிறேன். உலகமெல்லாம் பெண்ணுரிமை, பெண்களுக்கு இடஒதுக்கீடுன்னு பேசறாங்க. இந்த நவநாகரீக யுகத்திலே இவளுக்கு இப்படிப் புத்தி போகுதே...'' என்று அலுத்துக் கொண்டார் சம்பந்தம்.

''என்ன செய்யறது நம்ம தலையெழுத்து...'' என்று கிருஷ்ணபாரதியும் நொந்து கொண்டான்.

''உங்களுக்கு இந்தப் பெண்ணுரிமை, இடஒதுக்கீடு இதிலே எல்லாம் நம்பிக்கை இருக்கா மாப்பிள்ளை?''

''எனக்கு இதிலே எல்லாம் பெரிய நம்பிக்கை இல்லே மாமா... இது அரசியல். பெண்களுக்குச் சுதந்திரம், உரிமை எல்லாம் இல்லாமலா இருக்குது? நம்ம வீடுகள்லே எல்லாம் பெண்களை அடக்கியா வச்சிருக்கோம்? எப்போ அவங்களும் வேலைக்குப் போய்ச் சம்பாதிக்க ஆரம்பிச்சிட்டாங்களோ அப்பவே அவங்க சுதந்திரமா ஆயிட்டாங்கன்னுதான் அர்த்தம்... பெண்ணுரிமை, பெண்களுக்கு இடஒதுக்கீடு இதெல்லாம் அரசியல்வாதிகள் கிளப்பி விடுறது. நல்ல குடும்பத்துப் பெண்கள், நல்ல குணமுள்ள பெண்கள் இதிலே எல்லாம் ஈடுபட மாட்டாங்க...''

''அப்போ இந்த சுசீலா எப்படி?''

''அவ விவரம் புரியாமே, யோசித்துப் பாராமே இதிலே எல்லாம் ஈடுபடறா...''

''ஆண் ஆதிக்கம் அதிகமா இருக்குன்னு பத்திரிகைகளிலே எல்லாம் எழுதறாங்களே, இதெல்லாம் நெஜமா மாப்பிள்ளை?''

''விமானம் ஓட்டுறது, ராணுவம் வரைக்கும் பெண்கள் வந்துட்டாங்க. நம்ம ஜனாதிபதியே ஒரு பெண்தான். இந்திராகாந்தி பிரதமராகவே இருந்திருக்காங்க. நடைமுறையிலே பெண்களுக்கு எல்லா உரிமைகளும் இருக்கு மாமா... இது அரசியல்வாதிகள் பண்ணுற குழப்பம் மாமா... அவங்க வோட்டுக்காக இப்படியெல்லாம் கூத்தடிக்கிறாங்க... வேற ஒண்ணுமில்லே... சமூகத்திலே பெண்கள் ஆண்களுக்குச் சமமா எல்லா துறையிலேயும் முன்னேறுகிறாங்க. இதுதான் நிஜம்...'' என்றான் கிருஷ்ணபாரதி. அவருக்கும் இதுதான் சரியென்றுபட்டது.

அரசியல்வாதிகளுடன் மீடியாவும் சேர்ந்து கொண்டு ஒரு பொய்யான உலகத்தைச் சிருஷ்டி செய்து கொண்டிருக்கிறார்கள் என்றுதான் அவருக்குத் தோன்றியது.

**(தொடரும்)**

**எ**ங்கள் குடும்ப செண்டிமெண்ட்ஸ்:

★ வெள்ளி, செவ்வாய் பிரயாணம் கூடாது.

★ எண் 9தான் அதிர்ஷ்டம்; ராசியானது.

★ செவ்வாய்: புதிது உடுத்த மாட்டோம்.

★ வெளியே போகும்போது பின்னால் இருந்து கூப்பிட மாட்டோம்.

★ அதிகாலை வாசற்படியை கையினால் நீர் தெளித்துத் துடைத்துக் கோலம் போட வேண்டும்.

★ பூஜை ரூமில் நெய்தீபம் ஒன்றாவது ஏற்ற வேண்டும்.

★ குலதெய்வம் கோயிலுக்கு யார் போனாலும் உடனே காணிக்கை அளிப்பது.

★ வீட்டிற்கு யார் வந்தாலும் சிறு துண்டு வெல்லம், தண்ணீராவது கொடுக்காமல் அனுப்ப மாட்டோம்.

★ ஏதாவது பழத்தை வந்தவர் கையில் கொடுத்து அனுப்புவது.

★ தவறாமல் எல்லோரது நலம் விசாரித்து ஆசியை இறைவனிடம் வேண்டிக் கொள்வது.

**- பிரேமா ராவ், ஸ்ரீரங்கம்**

**எ**ன் ஆறு வயது பேரன் புவனசுந்தர[ம்] நான் எங்கே வெளியே கிளம்பினாலு[ம்] ''தாத்தா எங்கே போறே'' எனக் கேட்பா[ன்] ஒரு தடவை அல்ல பல தடவைகள் இ[...] னால் இடைஞ்சல்கள் ஏற்பட்டுள்ள[ன] தடங்கல், தாமதம் ஏன் இரத்தக் காய[ம்] கூட ஏற்பட்டுள்ளது. இதைத் தவிர்க்கவே வெளியே போகும் முன் நான் இந்த இட[ம்] போகிறேன் என நானாகவே வலிய பேரனி[ட]ம் சொல்லி விடுவதை வாடிக்கையாக்கி விட்டேன். என் மனைவியும், அவன் எங்கே போறே எனக் கேட்பதற்கு முன் இடத்தைச் சொல்லிவிட்டுக் கிளம்பி விடுவாள்.

**- அ. சம்பத், கோயம்புத்தூர்**

"**எ**ன்னைப் பொறுத்தவரை வீட்டை விட்டு வெளியே எங்கு செல்வதானாலும் சரி, அது சினிமாவிற்கோ, ஷாப்பிங்கோ, உறவினர், நண்பர் வீட்டிற்கோ கிளம்புவதற்கு முன்னால், என் வீட்டுப் பூஜை அறையில் வைத்திருக்கும் ஒரு ஐந்து ரூபாய் நாணயத்தை (இன்று வரை நாணயம்தான்! இதிலும் ஒரு செண்டிமெண்ட்!) பூவா, தலையா போட்டுப் பார்த்து, தலை




# பூவா தலையா போட்டுப் பாரு!



விழுந்தால்தான் கிளம்புவேன். (அதுவும் பூஜை அறைக்குள்ளேயே சுண்டிப் போட்டு 'ரிசல்ட்' பார்ப்பேன். இதுவும் சென்ட்டிமெண்ட்' ரகம்தான்!) இந்தப் பழக்கம் என் தந்தையிடமிருந்து எனக்கு ஒட்டிக் கொண்டது. ஆனால் ஒரு மாற்றம். என் தந்தை, 'பூவா... தலையா' போட்டுப் பார்க்க அப்போது தனக்குக் கிடைக்கும் காசை போட்டுப் பார்ப்பார். அவர் முடிவு, 'பூ' விழுந்தால்தான் கிளம்புவார். இது அவர் சென்ட்டிமெண்ட்! என்னைப் பொறுத்தவரை, என் மனம் சார்ந்த இந்த 'சென்ட்டிமெண்ட்டால்' இதுவரை தொண்ணூற்றி ஒன்பது சதவிகிதம் நல்லதே நடந்திருக்கிறது.

**- சுஜாதா கணேஷ்,**
**கோவை**

**மா**ர்கழி முப்பது நாட்களிலும், வாசலில் விதம்விதமான கோலங்கள் போடுவோம். இதிலும் எங்களுக்கொரு சென்டிமெண்ட் உண்டு. 15 புள்ளியில் ஆரம்பித்து 8 புள்ளி வரை இடைப்புள்ளி வைத்து, ஆறு மீன்கள் உள்ள கோலத்தையே முதல் நாள் போட்டு, மார்கழியைக் கோலாகலமாக வரவேற்பதை, இருபத்தைந்து வருடங்களாக நடைமுறைப் படுத்துகிறோம். மற்ற நாட்களில் எந்தக் கோலம் போட்டாலும், முதல் கோலம் மீன் கோலமாகத்தான் இருக்க வேண்டும் என்பதைச் செயல்படுத்துகிறோம். என்னுடைய இந்த 'கோல மீன்' சென்டிமெண்டை என் பெண்ணும் இன்றுவரை கடைபிடிக்கிறாள். ஒரு மன திருப்திக்காகவே இந்தச் சென்டிமெண்ட்டை நாங்கள் மாற்றி யோசிப்பதில்லை.

**- என்.ஆர்.நாயகி,**
**வேலாண்டிபாளையம்**



## சென்டிமெண்ட்

**வாசகர்களே!** உங்களோட சென்டிமெண்ட்! குடும்ப நம்பிக்கைகள் என்ன? ஃபோடோவோட எழுதுங்க... kalki@kalkiweekly -க்கும் அனுப்புங்க.



**என் மகன் இப்போது எல்.கே.ஜி. படிக்கிறான். அவனது மேற் படிப்புக்கு உதவும் வகையில் பாலிசி கள் என்னென்ன இருக்கின்றன?**

**- பி.அழகம்மை, செய்யாறு**

இன்ஷூரன்ஸ் என்பது ஒரு மனிதனின் வாழ்க்கையில் எதிர்பாராத மரணம்/ மூளை மற்றும் கைகால் முழு செயலிழப்பு போன்ற விஷயங்கள் நடந்தால் அந்த மனிதனின் குடும்பம் தங்கள் பிழைப்பை நடத்த நஷ்ட ஈடாக ஒரு தொகை கிடைக்க மட்டுமே எடுத்துக்கொள்ள வேண்டிய விஷயம். இன்ஷூரன்ஸ் எந்த ஒரு காலத்திலும் எதிர்காலத்துக்கான சிறந்த சேமிப்பாகாது. ஏனென்றால், மற்றவர்களின் நஷ்டத்தில் உங்கள் இன்ஷூரன்ஸ் முதலீட்டிலிருந்து வரும் லாபத்தில் ஒரு பங்கு எடுத்துக் கொள்ளப்படும்போது உங்கள் லாபத்தின் அளவு குறையும் அல்லவா? மகனின் கல்விக்கு மற்ற முதலீடுகளைத்தான் நீங்கள் செய்யவேண்டும்.

**பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆனதில் என் பங்கு ஐந்து லட்சங்கள். இதைப் பாதுகாப்பாக முதலீடு செய்ய விரும்புகிறேன். உங்கள் ஆலோசனை என்ன?**

**- வரதராஜன், காஞ்சிபுரம்**

இந்தப் பணம் உங்களுக்கு அடுத்த மூன்று முதல் ஐந்து ஆண்டுகளுக்குத் தேவைப்படாத பட்சத்தில் பாதிப்பணத்தை வங்கியிலும் பாதிப்பணத்தை நல்ல பங்குகளிலும் மியூச்சுவல் பண்டுகளிலும் முதலீடு செய்யலாம். பங்குச் சந்தை முதலீட்டில் அனுபவமுள்ள ஆலோசகரைத் துணைக்கு வைத்துக் கொள்ளுங்கள்.

**போஸ்ட் ஆபீஸ் சேமிப்புக்கும் வங்கிச் சேமிப்புக்கும் என்ன வித்தியாசங்கள்? எதில் அதிக பயன்?**

**- அருள், பாண்டிச்சேரி**

போஸ்ட் ஆபீஸ் சேமிப்பில் வட்டி சிறிதளவு மாறுபடும். ஆனால், வங்கிகள் அளிக்கும் கணக்கின் நடைமுறைச் சௌகரியத்தைவிட சிறிது குறைவான சௌகரியமே போஸ்ட் ஆபீஸ் கணக்கில் கிடைக்கும். சில கிராமப்புறங்களில் இருக்கும் போஸ்ட் ஆபீஸ்களில் பெரிய அளவில் பணம் எடுக்க வேண்டும் என்றால் முதல் நாளே சொல்லி வைக்கவேண்டியிருக்கும். வங்கிகளின் முதன்மைத் தொழில் பணத்தைக் கையாள்வது. போஸ்ட் ஆபீசிற்கு அது இரண்டாவதான தொழில். மேலும் வங்கியில் சேமிக்கும் போது திடீரென்று கடன் வாங்க வேண்டுமென்றால் அந்தச் சேமிப்பின் மீதே வாங்கலாம். அதுவும் போக, வெகு நாள் சேமிப்புக் கணக்கு வைத்திருக்கும் ஒரு நபர் வங்கியில் நீண்டகாலக் கடன்களான வீட்டுக்கடன் போன்றவற்றைப் பெறுவதற்கு முயற்சி செய்யும்போது நெடுநாள் கஸ்டமர் என்ற முன்னுரிமையில் சுலபமாக வங்கிகள் கடன் தர வாய்ப்புள்ளது. வங்கிகளுடன் உறவு இருப்பது எல்லாக் காலத்திலும் உதவக் கூடியது. அதனால் வங்கிச் சேமிப்பிற்கே என்னுடைய வோட்டு.

# வெள்ளி விற்று தங்கம

***எங்கள் வீட்டில் நிறைய வெள்ளிப் பாத்திரங்கள் இருக்கின்றன. திருமணத்துக்கும் பிற விசேஷங்களுக்கும் வந்தவை அவை. அதை வைத்துக்கொண்டு என்ன செய்வ தென்று தெரியவில்லை. என்ன செய்ய வேண்டும்?***

**- ஸ்ரீகிருஷ்ணா, சென்னை-11**

தங்கம் போலவே வெள்ளியும் விலை யேறும் விஷயமாகவே இருந்து வருகின்றது. திருமணத்துக்கும் பிற விசேஷங்களுக்கும் பரிசாக வந்தது என்று வேறு சொல்கிறீர்கள். எனவே, விலைக்கு விற்பதும் அழ கல்ல. எனவே அவற்றை வருடம் ஒரு முறையாவது பாலிஷ் செய்து மெயின் டெயின் செய்து வைப்பதைத்

# வாங்கு!

தவிர வேறு வழியில்லை. உபயோகிக்கக்கூடிய பொருட் களாக இருப்பின் தினசரி உபயோகத்தில் வைத்துக் கொள்ளலாமே? இடத்தை அடைக்கின்றது என்று நினைத்தீர்கள் என்றால் விற்றுவிட்டு வெள்ளி விற்ற காசில் தங்கத்தை எக்ஸ்சேஞ்ச் டிரேடட் பண்டுகளின் யூனிட்களாக உங்களது டீமேட் கணக்கில் வாங்கி வைத்துக்கொள்ளலாம். உங்களுக்கு வெள்ளிப்பரிசு கொடுத்தவர்கள் வீட்டில் விசேஷம் வரும்போது எதிர் மரியாதை செய்ய வேண்டியிருக்கும். அப் போது அந்த கோல்ட் பண்டின் யூனிட்டுகளை அன்றைய விலையில் (கிட்டத்தட்ட அன் றைய தங்கத்தின் விலை கிடைக்கும்) விற்றுத் தங்கப் பொருட்களாக வாங்கிக் கொடுத்து விடலாம்.



எப்போதும் வெயிலைப் பூசிக் கொண்டிருக்கும் கடலூர் மாவட்டத்தில் உள்ள முட்லூர், கீழமுங்கிலடி கிராமங்கள் இப்போது என்னவோ ஜிலு ஜிலு பெங்களூருவைப் போல, கலர்ஃபுல் காஷ்மீர் மாதிரிக் காட்சியளிக்கிறது. ஹோலிப் பண்டிகையை வயல்கள் கொண்டாடுகிறதோ என்று எண்ணும் வகையில் எங்கு பார்த்தாலும் அயல் தேசத்துப் பூக்களான 'கிளாடியோலஸ்' பூத்துக் குலுங்குகின்றன.



● தி.ராஜ் ப்ரவின்



சிதம்பரத்துக்கு அருகே உள்ள இக்கிராமங் களில் விவசாயிகள் முதன் முறையாக அலங்காரப் பூக்களை பணப்பயிராகப் பரிசோதனை முயற்சியாகப் பயிரிட்டு வெற்றி பெற்றுள்ளனர். இந்த அதிசயத்துக்கு அச்சாரம் போட்டது யார்? இதர விவசாயிகள் கிளாடியோலஸ் பூக்கள் பயிரிட மாறுவார்களா என்ற கேள்விகளோடு வலம் வந்தபோது...

# கடவுள் ஒய்வெடுக்கும் தோட்டம்!

''யுனிவர்சிட்டியிலேர்ந்து ஒருத்தர் வந்தாரு.ஸ்கிரீன்ல படம் ஓட்டிக் காமிச்சாரு. ரெண்டு ஊரு விவசாயிகளும் மகளிர் சுயஉதவிக் குழுப் பெண்களும் கூடியமர்ந்து பார்த்தோம். இதைத் தோட் டத்துல பயிரிட்டுப் பார்க்க யார் ரெடியா இருக்கீங் கன்னு கேட்டாரு. நான் தான் முதல்ல கை தூக்கினேன். ஜம்முவிலேர்ந்து விதைக்கரணை வாங்கித் தந்தாங்க. அஞ்சு சென்ட் தோட் டத்துல நட்டேன். வாரா வாரம் வந்து பார்த்தாங்க. என்னென்ன செய்யணும்னு சொல்லித்தந்தாங்க. எண்ணி அறுபதாவது நாள்லேர்ந்து பூக்கத் தொடங்கிடுச்சு. அறுபது லேர்ந்து தொண்ணூறு நாட்களுக்குள்ள பூத்துடுமாம். நல்லா 'திக்' செகப்பு கலர்ல பூ ஒண்ணு. நடுவுல வெள்ளை யோட செகப்பு கலர்ல இன்னொண்ணு. முழுசாகவே மஞ்சக் கலர், வெள்ளைக் கலர்னு நாலு வித கலர்கள்ல









ஸ்ரீனிவாசப்பெருமாள்



ரவீந்திரன்

பூக்கள். சினிமா பாட்டு சீன்ல பாக்கற மாதிரி இருக்கும் என் தோட்டம். அந்தச் சாமிக்கே இங்கே வந்து குடியேறிடலாம்னு தோணும்'' என்கிறார் சி.முட்லூர் கிராம விவசாயி ஸ்ரீனிவாசப்பெருமாள்.

''இதனைத் தொடர்ந்து பயிரிட நாங்க ரெடி. யார்கிட்ட வித்து பணமாக்குறதுன்னு தெரியலை. அரசாங்கம் இதனைச் சந்தைப்படுத்த முன் வரணும்னு மாவட்ட நிர்வாகத்திடம் கோரிக்கை வெச்சோம். இப்போ கடலூர் மாவட்டத் தோட்டக்கலைத் துறை இதுக்குனு நிதி ஒதுக்கீடு செய்து தந்துள்ளது. இனி கிளாடியோலஸ் பூக்களை வெளிச் சந்தைக்குக் கொண்டு சென்று விற்கும் முயற்சிகளில் இறங்குகிறோம்'' என்கிறார் கடலூர் மாவட்ட உழவர் மன்றங்களின் கூட்டமைப்புத் தலைவர் ரவீந்திரன்.





**அண்ணாமலைப் பல்கலைக்கழக வேளாண்மை விரிவாக்கத்துறை விரிவுரையாளர் முனைவர் கி.ராஜ் ப்ரவின் கூறுகையில்...**

''வேளாண் அறிவியல் மாநாட்டில் ஜம்மு காஷ்மீர் வேளாண் விஞ்ஞானி மனோஜ் நாசர் என்பவர், மூன்று மாத மலர்ச் சாகுபடியான 'கிளாடியோலஸ்' குறித்துப் பேசினார். கடலோர மாவட்டப் பகுதி விவசாயிகள் என் மனசுக்குள்ள வந்து போனாங்க. கடலோர மீனவர்களுக்கு, தினசரி மீன்பிடி வருவாய் போல, கடலோர விவசாயிகளுக்கு இந்த மலர்ச் சாகுபடி ரொம்பவே வகை கொடுக்கும்னு தீர்மானிச்சேன். விவசாயிகள் மற்றும் மகளிர் சுய உதவிக் குழுப் பெண்கள் மத்தியில் விளக்கினேன். கிளாடியோலஸ் பூக்களில் சுமார் முந்நூறு வகைகள் உள்ளன. அமெரிக்கன் பியூட்டி, ஒயிட் பிராஸ்பரட்டி, சம்மர் சன்ஷைன், கேண்டிமேன் ஆகிய நான்கு வகைகள் மட்டுமே இங்கு வரவழைக்கப்பட்டன. விதைத்து பயிரிட்டு வளர்த்ததில், நன்றாகவே பூக்கள் பூத்துக் குலுங்கின. முதல் கட்ட முயற்சியின் வெற்றி அது. இந்தக் கிளாடியோலஸ் பூக்கள் 'பொக்கே' தயாரிப்பதற்கும், ஐந்து நட்சத்திர விடுதிகளில் அலங்காரப் பூக்களாகவும் பயன்படுத்தப்படுகின்றன. இதற்கு வெளிநாட்டிலும் நல்ல கிராக்கி. பூச்செடி விதைகளை, ஜம்மு காஷ்மீர் மாநில அரசு நமக்கு இலவசமாகவே தந்து வருகிறது!''

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



# செந்தமிழ்ப் போட்டி முடிவுகள்!

குன்றெனக் குவிந்த கடிதங்களில் இருந்து சரியான விடை எழுதியவர்களைத் தனியே பிரிக்கவில்லை. காரணம் ஓர் இனிய அதிர்ச்சி... வந்திருந்த கடிதங்கள் அனைத்தும் சரியான விடைகளைத் தாங்கியிருந்தன! கலந்து கொண்டோர் அனைவரும் சரியான விடையை எழுதியிருப்பது தமிழைப் பெருமைப்படுத்தும் விதமாயிருந்தது. நான்கு இதழ்களில் மறைத்து வைத்திருந்த சொற்களைக் கண்டுபிடித்து, அந்தப் பாடல் வரி

''உன் சீரிளமைத் திறம் வியந்து
செயல்மறந்து வாழ்த்துதுமே''

என்றும் அதை எழுதியவர் மனோன்மணியம் பெ.சுந்தரம்



எஸ்.பவித்ரா
சிதம்பரம்



ஆர்.விஜயஸ்ரீ
சென்னை



லேப் டாப் பரிசு பெறும்...

எம்.நளினி
மும்பை

# கண்ணணில்



'முதல்வன்' படத்தில் வரும் 'குறுக்கு சிறுத்தவளே' என்ற பாடலில் வரும் 'என் கண்ணுக்குள்ளே கூடு கட்டி, காதுக்குள்ளே கூவும் குயிலே' என்ற வரிகள், எனக்கு மிகுந்த வியப்பை அளித்து, யோசிக்கச் செய்து பின்பு ரசிக்கவும் வைத்தன. காரணம்:

பொதுவாக குயில்களுக்குக் கூடு கட்டும் பழக்கம் இல்லை. காக்கையின் கூடுகளில்தான் முட்டை யிட்டுச் செல்லும். ஆனால், இந்தப் பெண் குயில் கூடு கட்டுகிறது! அதுவும் எங்கு? காதலனின்

பிள்ளை என்றும் சரியான விடையை எழுதி அசத்தி யிருந்தனர்.

அதிலிருந்து ஐந்து வாசகர்களை, குலுக்கல் முறையில் தேர்வு செய்து, தலா ₹ ஐந்நூறு பரிசு அளிக்கப்படுகிறது. அந்த வாசகர்கள் இதே போட்டிக்கு, தாங்கள் ரசித்த திரைப்பாடல்வரி குறித்து வாசகர்கள் அனுப்பிய கருத்துகள் ஆய்வு செய்யப்பட்டன. மிகச் சிறந்த கருத்துக்கு லக்ஷ்மி சிஸ்டம்ஸ் வழங்கும் லேப் டாப் பரிசு பெறுகிறார் எம்.நளினி. இதர திரைப்பாடல் வரி விமர்சனங்கள் இனி வரும் இதழ்களில்...

# தமிழைப் பெருமைப் படுத்திய வாசகர்கள்!



எம்.விக்னேஷ்
மதுரை



எஸ்.முகம்மது ஆஷிக்
கன்னியாகுமரி



டி.உமாதேவி
சேலம்

# கூடு கட்டும் குயில்!



கண்களுக்குள்ளே! ஏன்? வேறெந்தக் காக்கையும் (காதலிக்கும் பெண்களுக்கு, மற்ற பெண்கள் எல்லாம் காக்கைகள்தானே!) தன் காதலனின் கண்களுக்குள் கூடு கட்டும் முன் இந்தக் குயில் தானே கூடு கட்டிவிட்டது. தான் பேசுவதை மட்டுமே தன் காதலன் கேட்க வேண்டும் என்ற எண்ணம் பெண்களுக்கு உண்டு அல்லவா? அவன் கண்களுக்குள் கூடு கட்டிவிட்டால், எப்போதும் அவன் காதுகளுக்குள் அவள் குரல்தானே கூவிக்கொண்டிருக்கும். என்ன ஒரு நயமான கற்பனை! இப்படிக் கவிஞன் யோசித்தானா? தெரியாது. எனக்கு இப்படித்தான் தோன்றியது.



வேதாத்திரி தந்த அனுபவங்கள்

மனவளக்கலையில் ஆசிரியர் பயிற்சி முடித்த அன்பர்களுக்கு, 2004-ஆம் ஆண்டு சுவாமிஜி அவர்கள் 'அருள்நிதி' என்ற தகுதியைத் தந்து, தம் தவ ஆற்றலை, அவரின் வலது கை அசைவு மூலம் தர ஆயத்தமானார். அவர் அமர்ந்திருந்த மேடை அமைந்திருந்த அரங்கத்தின் பெயர் 'அருள் அரங்கம்'. அங்கு சுமார் 2000 பேர் அமரும் வசதி இருக்க, நாங்கள் சுமார் 420 பேர் அமர்ந்திருந்தோம்... ஆர்வம் ததும்ப.

''இன்றிலிருந்து நீங்கள் எல்லோரும் 'அருள்நிதி', உங்கள் இரு கைகளையும் விரித்து தவ ஆற்றலை வாங்கிக்கோங்க'' என்று சொல்லியவண்ணம் சுவாமிஜி கையை விசிற, அரங்கத்தின் கடைசி வரிசைக்கு முன் வரிசையில் அமர்ந்திருந்து, கை விரித்து கண்கள் மூடியிருந்த என் விரித்த உள்ளங்கைகளில் பரபரவென்ற குறுகுறுப்பு ஊடுருவிச் செல்ல, திடுக்கிட்டுக் கண் விழித்தேன். சுவாமிஜி... அதோ... மேடை மீதிருந்து மீண்டும் தன் கைகளை வலமிருந்து இடப்பக்கமாக விசிற.. மீண்டும் சிறு அதிர்வலைகளின் மோதல் சிலிர்ப்பு, கைகளில். எல்லோருக்கும் நிகழ்ந்ததா அந்த அனுபவம்...? என்று எனக்குத் தெரியாது. ஆனால், அறிவியலைப் பாடமாகக் கற்ற நான், ஆன்மிகத்தை 'முழுதாக' சுவாமிஜி கூறிய அறிவியல் கூற்றுப்படி ஏற்றுக் கொண்டேன்.

அன்றிலிருந்து, தினமும் முறையாக அகத்தவம் செய்யும்பொழுது,

# தியானம்தான்

ஆக்னையில், சுழலும் ஓர் உணர்வும்,

துரியத்தில் அழுத்தும் ஓர் உணர்வும்

துரியாதீதமாகிய சக்திகளத்தில் ஓர் சுழற்சியுடன் கூடிய நட்சத்திர மண்டலங்களின் - பாவனையும்

சிவ களத்தில் - கண் மூடியவுடன் தோன்றும் காட்சியற்ற நிலை மற்றும் ஒளியற்ற எல்லையற்ற ஓர் பயணமும், சாந்தித் தவத்தில் மூலாதாரத்தில் உணரக்கூடிய துடிப்பும் கிடைப்பதும், அதை நிறைவுடனும் வியப்புடனும் ஏற்றுக் கொள்கிறேன்.

இந்த மானுடப் பிறவியின் நோக்கம்,

''அன்பும் கருணையும்'' கொண்ட வாழ்வே ஆகும்.

நான் எனது வாழ்நாளில்

யாருடைய உடலிற்கும் மனத்திற்கும்

துன்பம் தரமாட்டேன்.

துன்பப்படுவோருக்கு என்னால்

முடிந்த உதவியைச் செய்வேன் -

★ ஜெயக்குமாரி தணிகாசலம்



பார்த்து வெளியே வரும்போது, வாயிலின் ஓரமாக இருந்த புத்தகக் கடையில் அவரின் கையெழுத்துப் பிரதி ஒன்று வாங்கினேன்.

சில நாட்கள் கழிந்த பின்னர் அதைப் படித்த போதுதான் எனது தவறை உணர்ந்தேன். பின் வேதாத்திரி மகரிஷியின் உடற் பயிற்சிகளின் எளிமையைத் தெரிந்த பின் அதை என் வாழ்வின் அன்றாட நிகழ்வாக்கினேன்.




உடலிலும் உடலுறுப்புகளினுள்ளும் பல மாற்றங்கள்... எனது குடும்ப மருத்துவச் செலவில் என் கணக்கு கழிந்தது. பின் எனது கணவரை இதில் இணைத்ததில் அவர்களின் மருத்துவச் செலவுகளும் குறைந்தன.

குடும்ப உறவுகள், மன அமைதி, இறுக்கம் எனது கட்டுக்குள் வர ஆரம்பித்தது. தவத்தினாலும், தற்சோதனைகளாலும் என் குடும்பம் இன்பமயமாகியது.

''நான் நானாக இருக்கும் போது என்னில் கோபமில்லை

நான் கோபமாக இருக்கும்போது அங்கு நானேயில்லை''

கசாப்புக் கடையில் தொங்குகின்ற ஆட்டைப் பார்த்து

கண்ணில் நீர் விட்டால் - நீர் மனிதன்

நாக்கில் நீர் விட்டால் - நீர் மிருகம் - என்கிற மகரிஷியின் பொன்மொழிகள் என்னை மிகவும் ஈர்த்தவை.

**- காந்திமதி தங்கவேலு, குடும்பத் தலைவி, கோவை**

என்ற இரண்டொழுக்கப் பண்பாடு... மகிரிஷி வழிகாட்டுதலால் தொடர்ந்து என்னைப் பண்படுத்துகிறது.

**- ஜெயக்குமாரி தணிகாசலம் (எழுத்தாளர் மற்றும் - பள்ளி ஆசிரியை)**

# மீட்பின் வழி!

**'ஓ'** வடிவ கோயிலைப் பார்க்க 1993-ல் வேதாத்திரி மகரிஷியை முதன் முதலில் அங்கு பார்த்தேன்.

ஆழியாறு போனபோது இது ஒரு 'சாமியார் மடம்' என நினைத்தேன், பயந்தேன்.



''நாங்க மகரிஷி குடும்பம்''

* சண்முகப் பெருமாள்

**நா**ன் யோகிராஜ் வேதாத்திரி மகரிஷியைப் பற்றி அறியும் முன் ஆறு, ஏழு வருடங்கள் தொடர்ந்து வெவ்வேறு வகையில் நோய்வாய்ப்பட்டு உடலாலும், மனத்தாலும் பாதிக்கப்பட்டு நடக்க முடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தேன். டாக்டர்களிடம் சென்று ஆறு வருடங்கள் காண்பித்து மருந்துகளைச் சாப்பிட்டுக் கொண்டே இருந்தேன். என்ன செய்வது என்று தெரியாமல் வேதனைப்பட்ட நிலையில் ஒருநாள் என் அக்கா மருமகள் மூலம்



● இராஜம்மாள்

எதிரியைக் கூட நாங்கள் 'வாழ்க வளமுடன்' என்போம். இந்த வார்த்தை மகரிஷி கொடுத்த சொத்து.

மகரிஷியின் தியான வகுப்புக்குச் சென்று சேர்ந்தேன். முதலில் உடற்பயிற்சியை என்னால் செய்ய முடியாமல் ஒரு மாதம் மற்றவர் செய்வதைப் பார்த்துக்கொண்டே இருந்தேன். பின்னர் அங்கு வந்த ஆசிரியர்கள் மனவளக்கலை என்றால் என்ன? தியானம், மனம், எண்ணம், உடல், உயிர் என்றால் என்ன? என்பவற்றை விளக்க விளக்க அதில் மனம் தெளிவடைந்து மெள்ள மெள்ள நானும் உடற்பயிற்சி செய்ய ஆரம்பித்தேன். பின்னர் படிப்படியாக உடல், மனம், எண்ணம் எல்லாம் ஐக்கியமாகி தீட்சை பெற்று, கொஞ்ச நாள் தியான நிலையில் ஆழ்ந்த மனத்துடன் ஈடுபட்டு, மிக விரைவில் அகத்தாய்வு பயிற்சி, காயகற்ப பயிற்சி பெற்று, பின்னர் ஆழியாறு சென்று பிரம்ம ஞான பயிற்சி பெற்று நான் வேதாத்திரி மகரிஷியிடம் சான்றிதழ் பெற்றபோது ஆனந்தம். பின்னர் ஆசிரியர் பயிற்சி முடித்து மீண்டும் அவரிடமே சான்றிதழ் பெற்றபோது பேரானந்தம். இந்த வயதில் இப்போது எந்த வியாதியும் இல்லை. எங்கிருந்து வந்தது என்னுள் இந்தச் சக்தி என்பதை உணர்ந்தேன்.

கோபத்தை யாராவது தூண்டினால் வாழ்க வளமுடன் என்று சொல்லும்போது அந்த வார்த்தை எதிரியை மட்டுமல்ல. உலக மக்கள் யாவரையும் மாற்றும் என் பார் மகரிஷி. 'வாழ்க வளமுடன்', அது தான் எங்கள் குடும்பச் சொத்து.

- இராஜம்மாள் கந்தசாமி,
மேட்டுப்பாளையம்

**ம**கிழ்ச்சியில் இரண்டு வகை இருக்கு. ஒன்று வெளியே இருந்து வருவது. இன்னொன்னு நமக்கு உள்ளேயே இருப்பது. நாம நமக்குள்ள இருக்கிறதோட மதிப்பு தெரியாம, அனுபவிக்காம வெளியே இருக்கிற சந்தோஷத்துக்கு அலைபாயுறோம். ஏற்கெனவே நான் ஓஷோவைப் படிச்சுட்டு ஒரு குருவைத் தேடிக் கொண்டிருந்த சமயம் வேதாத்திரி அறிமுகமானார். எனக்கு நேரடியாக அவரைப் பார்க்க, பயிற்சி எடுக்க பெரும்பேறு கிடைத்தது. என் தியானத்துக்கு வழிகாட்டல் மகரிஷி தான். அவர் கிடைத்தபின் டிவி, ஏஸி, மது, மாது, உணவு இவை எதும் இல்லாமல் நான் தனிமையில் பேரானந்தத்தை அனுபவிக்கும் நிலைக்கு வந்து விட்டேன். இப்போது எங்கள் குடும்பம் மகரிஷி குடும்பம். ஒவ்வொருவரும் நமது பாரம்பரியமான தியானத்தை நோக்கித் திசை திரும்புங்கள் என்பதுதான் முதலும் கடைசியுமான மீட்பின் வழி.

- ஷண்முகப் பெருமாள், கொரட்டூர்

விஜயகுமார், மேட்டுப்பாளையம்

# எங்கு தொட்டாலும் ஊழல்!

சுதந்தர தின உரை நிகழ்த்தும்போது ஒரு முதல்வர் வேடிக்கையாகப் பேசுவதென்பது அரிதாக நிகழ்கிற ஒரு சம்பவமே. 'காமன்வெல்த் போட்டியை நடத்துவதன் மூலமாக நாட்டின் மதிப்பு உயரும்' என்று தேசியக்கொடியை ஏற்றிவிட்டுப் பேசியிருக்கிறார் டெல்லி முதல்வர் ஷீலா தீக்ஷித்.



சுரேஷ் கல்மாடி

முதல் ஐம்பது வருடங்களுக்கு, பிரிட்டிஷ் எம்பயர் கேம்ஸ், பிரிட்டிஷ் எம்பயர் அண்ட் காமன்வெல்த் கேம்ஸ், பிரிட்டிஷ் காமன்வெல்த் கேம்ஸ் என்கிற பெயர்களில் காமன்வெல்த் போட்டிகள் நடத்தப்பட்டன. ஒருகாலத்தில் பிரிட்டனின் கட்டுப்பாட்டுக்குள் இருந்த அத்தனை நாடுகளும் கலந்து கொள்ளும் போட்டி இது என்பதால் இதற்கு எப்போதுமே ஒரு மதிப்பும் மரியாதையும் உண்டு.

இந்தியாவுக்குப் பதிலாக கனடாவுக்குத்தான் 2010 காமன்வெல்த் போட்டி சென்றிருக்கவேண்டும். ஆனால், இதற்கான ஓட்டெடுப்பின்போது, இலவச டிவி, ஒரு ரூபாய் அரிசி பாணியில் போட்டியில் கலந்து கொள்ளும் அனைத்து நாடுகளுக்கும் 50 லட்சம் ரொக்கத் தொகை வழங்கப்படும்; கூடுதலாக விமானச் செலவிலிருந்து அனைத்து ஏற்பாடுகளுக்கும் தானே பொறுப்பேற்றுக் கொள்வதாக இதர காமன்வெல்த் நாடுகளுக்குச் சலுகைகள் வழங்கி வாய்ப்பைப் பெற்றது இந்தியா.

போட்டிக்காக டெல்லிக்கு சில வசதிகள் (உலகத் தரத்தில் ஒரு விமான நிலையம், மெட்ரோ ரெயிலுக்குக் கூடுதல் வசதிகள், மின்சார தேவைக்கு அதிக நிதி) கிடைக்கப் பெற்றாலும் காமன்வெல்த் போட்டிக்கான

**ச.ந.கண்ணன்**



வளவு செலவு செய்த பின்பும், இதுவரை உருப்படியான ஸ்பான்ஸர்கள் கிடைக்க வில்லை. போட்ட பணமாவது திரும்பக் கிடைக்குமா என்கிற பயம் இப்போது எழுந் துள்ளது. (2006 காமன்வெல்த் போட்டி மெல்பர்னில் நடந்தபோது 50 சதவிகிதம் லாபம் பார்த்தது ஆஸ்திரேலியா.) போட் டிக்காகக் கட்டப்பட்ட அத்தனை மைதா னங்கள், உள் அரங்குகளிலும் திட்டமிட் டப்படி மே மாதமே எல்லா வேலைகளும் முடிந்து, வாசலில் ரிப்பன் கட்டப்பட்டிருக்க வேண்டும். ஆனால் போட்டி ஆரம்பமாகும் நாளன்று, சிமெண்டும் ஜல்லியும் வந்து இறங்கிக் கொண்டிருந்தாலும்கூட ஆச்சரியப்படுவதற்கில்லை. 'காமன்வெல்த்' என்பதைத் தவறாகப் புரிந்துகொண்டு எல்லா நிதி ஒதுக்கீடுகளிலும் நீக்கமற ஊழல் நடந்திருப்பதால் வேலைகளில் தாமதம், கட்டுமானப் பணியில் தரமின்மை என்று டெல்லி காமன்வெல்த் போட்டி விழி பிதுங்கிக் கொண்டிருக்கிறது..

செலவுகள் எக்கச்சக்கமாக அதிகமாகிப் போனாலும் தொழிலாளர்களுக்கு அடிமட்ட கூலியே வழங்கப் பட்டுள்ளதாகவும் கட்டட வேலைகளில் ஏற்பட்ட விபத்தினால் இதுவரை 70 தொழிலாளர்கள் உயிரிழந் திருப்பதாகவும் இப்போது தெரிய வந்திருக்கின்றன. போட்டியின் மோசமான நிலையை ஆராய்ந்த சென்ட்ரல் விஜிலென்ஸ் கமிஷன், பல்வேறு குற்றச் சாட்டுகளை முன்வைக்க, இப்போது சிபிஐ உள்ளே நுழைந்துள்ளது. போட்டி அமைப்பின் உயர் அதிகாரி களான டிஎஸ் தர்பாரியும் சஞ்சய் மெஹ்ரண்ட்ருவும் சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளார்கள். எங்கு தொட்டா லும் ஊழல் ஷாக் அடிப்பதற்குக் காரணகர்த்தாவான இந்திய ஒலிம்பிக் அமைப்பின் தலைவர் சுரேஷ் கல்மாடியை இப்போதைக்கு கை வைக்கமுடியாது. என்றாலும், அவரை நிம்மதியாகத் தூங்க விடாமல் பத்திரிகைகளும் டெலிவிஷன் சேனல்களும் பார்த் துக்கொள்கின்றன. இத்தனைக்கு மத்தியிலும், இந்தப் போட்டியினால் நாட்டுக்குப் பெருமை என்கிற டெல்லி முதல்வரின் பேச்சு காற்றில் பறக்கும் தேர்தல் வாக்குறு திக்குச் சமம்.

பி.கு: 2012ல் நடக்கும் ஒலிம்பிக் போட்டிக்கு லண்டன் இப்போதே ஜம்மென்று தயாராகிவிட்டது.

வேலைகள் ஆரம்பித்த நாளிலிருந்து டெல்லிவாசிகள் பலவித இன்னல் களால் துன்புற்று வருகிறார்கள். பத்தாயிரத்தும் மேற்பட்ட குடிசை வாசிகள் வேறு இடங்களுக்கு அப் புறப்படுத்தப்பட்டுள்ளார்கள். குடிசைகளை வெளிநாட்டவர் பார்க்காதவாறு குடிசைகளுக்கு மூங்கில் திரைகள் போடப்பட்டுள் ளன. எங்கும் ஏழ்மையே தெரியாத வாறு டெல்லிக்கு ஒட்டுவேலைகள் நடந்து வருகின்றன. பசுமை நகர மான டெல்லியில் நூற்றுக்கணக்கான மரங்கள் வெட்டப்பட்டு வருகின் றன.

முதலில் திட்டமிடப்பட்ட செலவு, 300 கோடி; ஆனால் இப் போது இதன் செலவு பத்தாயிரம் கோடிக்கும் அதிகமாக எகிறிவிட் டது. ஏழைகளின் நலத்திட்டங்களுக் காக ஒதுக்கப்பட்ட நிதி இதற்குத் திருப்பிவிடப்பட்டுள்ளது. இவ்



என்னிடம் எவ்விதத் தொலைதொடர்பு சாதனங்களும் இல்லை. நண்பர்களும் உறவினர்களும் எங்களது குடும்பத்தினரிடம் பேசுவதற்கு நினைத்தால் பக்கத்துத் தெருவுக்குத்தான் போகணும். ஊரில் ஒரே ஒரு லேண்ட் லைன் ஃபோன் மட்டுமே. அதில்தான் எந்தத் தகவலையும் பெற முடியும். ஒன்லி இன்கம்மிங். அவசரத்திற்கு ஒரு கால் பண்ண முடியாது. மேலும், பக்கத்துத் தெருவில் போன் வைத்திருக்கும் நபர் நல்ல மனநிலையில் இருந்தால் கூப்பிடுவார். இல்லையென்றால் அவரே ஏதாவது பொய் சொல்லி இணைப்பைத் துண்டித்து விடுவார். இதனால் பல முக்கிய விஷயங்களை அறிய முடியாத நிலையில் இருந்தோம். இப்படிப்பட்ட பல சலிப்பான அனுபவங்களுக்குப் பிறகு 'செல்'போன் வாங்கினோம். இப்போது செல்போன் மூலம் நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் எஸ்.எம்.எஸ். மூலம் தகவல் அனுப்புகிறேன். (அப்புறம் என்ன...? 24 மணி நேரமும் ஊ..ல...ல...தான்!)

**- எம்.எஸ்.கே. அருள்தேவன், முனியங்குறிச்சி**



சென்ற மாதம் அமெரிக்காவிலிருந்த என் மகன் வரும்போது, கண்டதை வாங்கி வராதே. நீ அங்கு டிரேஷ் பின்(குப்பைத் தொட்டி)வில் தூக்கி எறியும் பொருள் இருந்தால் கொண்டு வா. அதுவே போதும் என ஃபோன் செய்து கூறியிருந்தேன்.

அங்கு குப்பைத் தொட்டியில் போட இருந்த இரண்டு செல்போன்களைக் கொண்டு வந்தான். அதை இங்கு ரூ.200 செலவழித்து ரிப்பேர் செய்தேன். இப்பொழுது என்னிடம் இரண்டு அருமையான கேமரா செல்ஃபோன்கள்.

**- கே.என்.சுப்பிரமணியன், நவி மும்பை**

## என் 'செல்'லமே!

சமீபத்தில் என் பிறந்த நாள் வந்தது. என் கணவர் தன் அன்புப் பரிசாக, ஒரு கேமிரா செல்ஃபோன் வாங்கித் தந்து, என்னை இன்ப அதிர்ச்சிக்குள்ளாக்கினார். மிகவும் அழகான, கைக்கு அடக்கமான மொபைல் அது.

நான் எங்கு சென்றாலும், செல்ஃபோன் கட்டாயம் இருக்கும். இப்பொழுது என் பையன் ஐ-ஃபோன், ஐ-பாட் எல்லாம் வைத்திருக்கிறான்.

ஆனாலும் லேண்ட் ஃபோன் வழி கேட்ட, மகனின் முதல் குரல், இன்னமும் என் காதினுள் ரீங்காரமிட்டுக் கொண்டே இருக்கிறது.

**- ச.ஜெயலெட்சுமி, கொரட்டூர்.**

# 24 மணிநேரமும் ஊ...லா...லா...!

# அமானுஷ்ய 'வில் பவர்' ஆள்தான்!



என் மனங்கவர்ந்த சேனல் 'டிஸ்கவரி' சேனல்தான்! புயல் எப்படி உருவாகிறது; புயலின் 'கண்' அமைப்பு; மேகங்களிடையே உருவாகும் இடி; மின்னலின் சக்தி - அதில் உற்பத்தியாகும் மின்சார அளவு; வெப்பக் காற்று, குளிர் மேகம், இடியின் பயங்கரம்... அடேங்கப்பா ஏராளமான தகவல்களைத் தருகிறது. தனி மனிதனாக பனிப் பிரதேசப் பயணம்; ஆள் விழுங்கும் திடீர் பள்ளம், உணவாக நண்டு, தேள், மீன்! கொடிய காற்று, எரிக்கும் வெயில், மீள முடியாத சுழல், விஷ ஜந்துக்களின் பாய்ச்சல்!

உண்மையில் அந்த நபர் (Bear Grylls) - அமானுஷ்ய 'வில்' பவர் ஆள்தான்! ஆராய்ச்சிக்காக இன்னுயிர் பயணம், பணயம்! பார்க்கப் பார்க்க அறிவு விரிவாகிறது.



✱ எஸ்.ஜெயராம்

- எஸ்.ஜெயராம், அரணவாயல்


விஜி முத்து

திரும்பிப் பார்ப்பது என்பது எல்லோருடைய வாழ்க்கையிலுமே ஒரு சுவையான விஷயம். கடந்து போன நல்ல விஷயங்களைத் திரும்பிப் பார்க்கும்பொழுது மனத்தில் உற்சாகம் பீறிடுகிறது! சாதாரணமானவர்களுக்கே இப்படி என்றால் சாதனையாளர்களைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ?

சினிமாத் துறையிலுள்ள சாதனை யாளர்களைத் திரும்பிப் பார்க்க வைத்து நம்மையும் நமது பழைய மலரும் நினைவுகளுக்கும் அழைத்துச் செல்லும் ஜெயா டி.வி.யில் இரவு பத்து மணிக்கு ஒளிபரப்பாகும் 'திரும்பிப்பார்க்கிறேன்' என்ற நிகழ்ச்சி எனக்கும் என் கணவருக்கும் மிகவும் பிடித்த நிகழ்ச்சிகளில் ஒன்று.

நாம் வெகு சுலபமாக வீட்டில் இருந்தபடியோ அல்லது தியேட்டருக்குப்போயோ சினிமா பார்க்கிறோம். ஒவ்வொரு சினிமாவுக்குப் பின்னும் எத்தனை பேருடைய ஒருங்கிணைந்த கடின உழைப்பு ஒளிந்திருக்கிறது என்பது இந்த நிகழ்ச்சியைப் பார்க்கும்போதுதான் புரிகிறது. சினிமாத் துறையில் கையாளப்படும் நமக்குத் தெரியாத எத்தனையோ யுக்திகள், நுணுக்கங்கள் பற்றி அவர்கள் பேசுவதைக் கேட்க ஒரே வியப்பாக இருக்கிறது!

- விஜி முத்து, மும்பை

'காஃபி வித் அனு'வில் பழம் பெரும் நடிகை விஜயகுமாரி + லதா பேட்டி அற்புதமாக இருந்தது. தாம் திருமணம் செய்யாமல் just like thatஆக சேர்ந்து வாழ்ந்ததாகவும், பின்னால் பிரிந்ததாகவும் மனம் உருகப் பேசினார். அவர் நடித்த 'நானும் ஒரு பெண்', 'கல்யாண பரிசு', 'பூம்புகார்' படங்கள் சோகமயமாகவே இருந்தன. அவர் சொந்த வாழ்க்கையும் அப்படியே அமைந்துவிட்டதே! என்ற வருத்தம் எனக்கு ஏற்பட்டது. வானத்து நட்சத்திரங்களும் திரை நட்சத்திரங்களும் ஒன்றே தான் போலும்!

-எஸ்.அமிர்தா, சென்னை -26

**டி.வி.யில் உங்களுக்குப் பிடித்த நிகழ்ச்சி எதுவாயினும்... 'சேனல் சாய்ஸ்' என்று குறிப்பிட்டு புகைப்படத்தோடு எழுதுங்க. kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம்.**



'நீயா? நானா?' விஜய் டி.வி.யின் ஹிட் நிகழ்ச்சி. ஒவ்வொரு வாரமும் முன்னேற்றப் பாதையில் போய்க் கொண்டேயிருக்கும் எனக்குப் பிடித்த நிகழ்ச்சி. கோபிநாத்தின் அணுகுமுறை சிறப்பு. சமயங்களில் உறுதியுடன் பேச முடியாதபடி மழுப்பலாக, விவாதத்தை நகர்த்துவது சேலஞ்ஜிங்காக இருக்கிறது. மனிதனின் மனத்தில் எவ்வளவு விஷயங்கள்? ஆசை, கோபம், போட்டி, பொறாமை, சுக - துக்கங்கள், ஏக்கங்கள் என அத்தனையும் நாம் புரிந்து கொள்ள முடிகிறது. சூப்பர் நிகழ்ச்சி.

- பி.சங்கவி, குளித்தலை

வாழ்க வளமுடன் ஸ்வாமிஜி



"சமூகத்தின் ஒரு
உறுப்பு உலகிலுள்ள
தனி மனிதன் என்று எவரும்
உணர்ந்து கொண்டால்
சமூகத்தின் கூட்டுறவில்
இன்பம் துன்பம்
சரிசமமாய் அனுபவிக்கும்
சகிப்புண்டாகும்."

# வேதாத்திரி கானம்!

இருப்பே கொள்ளவில்லை காமனுக்கு. எப்படா ஊருக்குக் கிளம்புவோம் என்றிருந்தது. அப்படி ஒன்றும் தலைபோகிற வேலையு மில்லை; ஊரிலும் கொட்டுகிற மழை யில் எந்த வேலையும் கிடைக்கப் போவதுமில்லை. அது மட்டுமல்ல, வெயிலுக்குத்தானே தவிர மழைக் கெல்லாம் வீடல்ல அவனுடையது. இதையெல்லாம் சேர்த்துப் பார்த்துக் கணக்குப் போட்டுத்தான் ஒரு பத்து நாளாவது மகளின் வீட்டில் டேரா போட்டுவிட வேண்டும் என்ற முடி வோடு வந்திருந்தான் காமன்.



''இப்படி உடாம கொட்டுதே. நாம அங்க போயிருக்க நேரம் பாந்து இங்க மழையில் குடிச குந்திக்குச்சன்னா என்னாய்யா பண்றது'' என்று தயங்கிய பொண்டாட்டி சாலியையும் பெரும் பாடு பட்டு இழுத்துக் கொண்டு வந்தி ருந்தான்.

மகள் சொன்ன அந்த எச்சரிக்கை வார்த்தைகள் அவனை எரிச்சலின் விளிம்பிற்குக் கொண்டு சென்றது. இனி இங்கத் தங்கக் கூடாது. கிளம்பிவிட வேண்டியதுதான் என்ற முடிவுக்கும் அவனை உந்தித் தள்ளியது.

''நம்ப ஊர்ல குந்தற மாதிரி இங்க திண் ணைல காலத் தொங்கப் போட்டு ஏதும் குந்திராதப்பா. குடியானத் தெரு ஆளுக வந்த மாவியும் போன மானியுமா இருப்பாங்க. பாத்தாங்கன்னா ஒன்னு கிடக்க ஒன்னு ஆயிடும்.''

அவள் சொன்னதிலும் ஞாயம் இருக்கவே செய்தது. காமனுக்கு பீடி, சிகரெட்டு, வெற்றிலை, பாக்கு, புகையிலை, பட்டை, ஏன் டீ குடிக்கிற பழக்கம்கூட இடையாது. இதில் ஒன்றோ, இரண்டோ அல்லது எல்லாப் பழக்கங்களுமோ இல்லாத ஒரு பதினைந்து வயது பையனைக் கூட காலனியில் பார்க்க இயலாது.

இப்படி எந்தப் பழக்கத்திற்குள்ளும் விழுந்துவிடாத காமனையும் கடந்த முப்பது வருடங்களாக உடும்பு மாதிரி இறுக்கிப் பிடித்திருக்கிறது ஒரு பழக்கம். காலையில் எழுந்ததும் நேராக 'பிச்சை' கடைக்குப் போய் நியூஸ் பேப்பரை வாங்கி வந்து திண்ணையில் கால் மேல காலத் தொங்கப் போட்டு உட் கார்ந்து படித்தால்தான் ஆகும். விடாது மழை பெய்து கொண்டிருந்தாலும் ஒரு பழைய சாக்கைத் தலையில் தூக்கிப் போட்டுக் கொண்டு போய்விடுவான்.

இவனுக்காகவே ஒரு காலைப் பேப்பரைத் தனியாக மடித்து வைத்திருப்பான் பிச்சை. இவனைக் கண்டதும் அனிச்சையாகவே பேப்பரை எடுத்து நீட்டி விடுவான். இவனும்

**□ இரா.எட்வின்**



பெரிய வாத்தியார் வேண்டுமானால் பழநிமுத்து கடையில் உட்கார்ந்து பேப்பர் வாசிக்க முடியும். காலனிக்காரர்களால் அது முடியாது என்பதும் சாலிக்கு நன்கு தெரியும்.

ஊருக்குள் காமன் என்றால் யாருக்கும் தெரியாது. 'நியூஸ் பேப்பர் காமன்' என்றால் நேற்றுப் பிறந்த பிள்ளைக்கும் நன்கு தெரியும். உண்மையைச் சொல்வதெனில் வேலைக்குத் தேவைப்படும்போது ''ஏலே செத்தப் போயி நாங் கூப்பிட்டேன்னு அந்த 'நியூஸ் பேப்பர' இளுத்துட்டு வாங்கடா'' என்றால் நேரே காமன் வீட்டுக்கு வந்து விடுவார்கள்.

காலனிக்காரர்களை அவர்கள்

# நியூஸ் பேப்பர் காமன்!

காசைக் கொடுத்து பேப்பரை வாங்கிக் கொண்டு அங்கு நிற்காமல் கிளம்பி விடுவான். பிச்சையும் வாங்கிய காசை எண்ணிக்கூடப் பார்க்காமல் அப்படியே டப்பாவில் போட்டு விடுவான். சரியாக இருக்கும்.

''பள்ளிக் கூடத்து பெரிய வாத்தியாரே பழநி முத்து டீக்கடைல வந்து பேப்பர் பார்த்துட்டுப் போறாரு. காசு அழுது வாங்கிட்டு வந்து படிச்சாதான் ஆகும் எங்க வீட்டு சீமைல மொளச்ச இந்த ஜில்லா கலெக்டருக்கு'' எரிச்சலோடு சொல்வது மாதிரிதான் இருக்கும். காலனிக்குள்ள பேப்பர் படிக்கிற புத்திசாலி தன் புருஷன் என்பதில் ரகசியமாய் பெருமைபொங்கவே செய்கிறது சாலிக்கு.

அப்பா அம்மா வைத்த பெயர் சொல்லி யாரும் அழைப்பதில்லை. ஊருக்குள் மூன்று ராமசாமிகள். அடையாளம் தெரிய வேண்டி ஊர் மக்கள் வாத்தியார் ராமசாமி என்று அழைத்தனர். ஆனால் காலனியில் இருக்கும் ராமசாமியை 'தொத்தக் காளை' என்றும் கந்தனை 'தண்ணி வண்டி' என்றும் மாணிக்கத்தை 'பூச்சி' என்றும்தான் அழைத்தார்கள்.

இப்போது காலனி இளைஞர்களிடம் சின்ன சலசலப்பை இது உண்டு பண்ணியிருக்கிறது.

''நம்ம பசங்களும் படிச்சு அவங்கள

மாதிரி டிரைவரா, வாத்தியாரா வந்தாத்தான் நம்மள பேர் சொல்லிக் கூப்பிடுவாங்க போவடா'' என்றான் சண்முகம். சண்முகம் ஊர் மக்களால் மம்புட்டி மகன் என்றே அழைக்கப்பட்டான்.

''அப்பவும் கூப்பிட மாட்டாங்கடா. அப்பவும் காலனி சண்முகம், காலனி கோவிந்தன் என்றுதான் கூப்பிடுவாங்க'' என்று இடை வெட்டினான், வேலு. ஊருக்குள் வேலுவின் பெயர் கடப்பாரை பேரன்.

ஊர்க்காரர்கள் இப்படி அழைப்பதைப் பார்த்து காலனிக்காரர்களும் தங்களை 'கடப்பாரை' யென்றும், 'மம்புட்டி'யென்றும் 'தொத்தக்காளை'யென்றும் அழைத்துக் கொள்ள ஆரம்பித்து அப்படியே நிலைத்து விட்டது.

இதில் காமனுக்கு ஏகத்துக்கும் வருத்தம் தான். ஆனாலும் 'கடப்பாரை', 'மம்புட்டி', 'பூச்சி', என்று மற்றவர்கள் அழைக்கப் படுகையில் தான் மட்டும் செய்தித்தாளின் பெயரால் அழைக்கப்படுவது தனக்கான அறிவு சார்ந்த அடையாளமாகவே காமனுக் குப் படும். வெளியே காட்டிக் கொள்வதில்லை என்றாலும் அதில் கொஞ்சம் திமிறேகூட உண்டு காமனுக்கு.

இதையெல்லாம் மனத்தில் வைத்துக் கொண்டுதான் கலை, காமனிடம் அந்த எச்சரிக்கை வார்த்தைகளைப் போட்டு வைத் தாள். ஊர் நிலவரம் தெரியாமல் இவன் பாட்டுக்கு பேப்பரை போட்டுக் கொண்டு உட்கார்ந்து வாசிக்க அதை அந்தச் சனங்க பார்த்துவிட்டால் 'காலைத் தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தது மற்றும் பேப்பர் வாசித்தது என்கிற வகையில்' அது ரெட்டைக் குற்றமாகி விடுமே என்கிற பயம் அவளுக்கு.

அது மட்டுமல்லாமல் மருமகன் சங்கிலி மூலமாகக் கிடைத்த தகவல்களும் அவ்வளவு நல்ல விதமாக இல்லை. எனவே இருக்கப் பிடிக்கவில்லை காமனுக்கு. என்ன பாடுபட்டு பொண்டாட்டி சாலியை இங்கு கூட்டி வந்தானோ அதைவிடப் பெரும்பாடு பட்டு அவளை இங்கிருந்து கிளப்பினான் காமன்.

வேறு வழியில்லாமல் சாலியும் புலம்பிக் கொண்டே கிளம்பிவிட்டாள். மகள் கலைக் கும் மருமகன் சங்கிலிக்கும் காமனைப் பற்றி நன்கு தெரியும் என்பதால் வருத்தமோ கோபமோ கொள்ளவில்லை.

பேருந்து நிலையம் ஒட்டி சாலையின் ஓரத்தில் கூடைத் தட்டுகளில் வைத்து வாழைப்பழங்களை விற்றுக் கொண்டிருந்




''விஷப்பாம்மை 'நல்ல பாம்பு'ன்னு சொல் றாங்க! கடுமையான வெயிலை 'நல்ல வெயில்'னு சொல்றாங்களே! ஏன் சார்?''
''நல்ல கேள்வி!''
- உமாமகேஸ்வ[ரி]



> **"அந்தக் கண்டக்டரு மேட்டுத் தெருவுல ரெண்டு டிக்கெட் ரெண்டு காலனில ரெண்டு டிக்கெட்டு சொன்னாருல்ல."**

தார்கள் ஒரு கடையில். ''ஆன வெல குதிர வெல சொல்றீயேம்மா'' என்று முனகிக் கொண்டே ஒரு சிப்பு பூவம்பழம் வாங்கிக் கொண்டான். பையில் இடமில்லாததால் கையிலேயே பிடித்துக் கொண்டான்.

பேருந்து நிலையத்துள் நுழையும்போதே ஏழாம் எண் பேருந்து வெளியே வந்து கொண்டிருந்தது. கையை நீட்டிக் கொண்டே நடந்தவனைப் பார்த்து ''விடுய்யா, போகட்டும். குந்த இடமில்லாம நிக்கிறாக. அடுத்த பஸ்ல போகலாம்'' என்று தடுத்துப் பார்த்தாள் சாலி. ''அட ஏறு புள்ள. எல்லா வண்டியிலும் கூட்டமாத்தான் இருக்கும்'' என்று அவர்களுக்காக நின்ற பேருந்தில் சாலியை ஏற்றிவிட்டுத் தானும் ஏறிக் கொண்டான்.

பெண்கள் பகுதியின் முதல் இருக்கையில் சாய்ந்து நின்று கொண்டாள் சாலி. வாழைச் சிப்பை கண்ணாடிக்கும் இஞ்சினுக்கும் இடைப்பட்ட பகுதியில் போட்டுவிட்டு இஞ்சினை ஒட்டினாற்போல நின்று கொண்டான் காமன்.

முதல் இருக்கையில் அமர்ந்திருந்த பெண் அண்ணா சிலையில் இறங்கிக் கொள்ளவே சாலிக்கு உட்கார இடம் கிடைத்தது. உட்கார்ந்தவள் இடுப்பிலிருந்து சுருக்குப் பையை எடுத்து வெற்றிலை போடுவதற்கு ஆயத்தமானாள்.

''நம்ம வீட்டுத் திண்ணைல காலத் தொங்கப்போட்டுக் குந்தக் கூடாதுங்குறது என்ன ஞாயம்'' என்று விடாது உளைந்து கொண்டே வந்தான் காமன். நெஞ்சு வலியே வந்துவிடும்போல் இருந்தது அவனுக்கு. இது எது பற்றியும் சஞ்சலப்பட்டுக் கொள்ளாத சாலி, எச்சில் துப்பத் தோதாக இருக்குமென்பதால் சன்னல் ஓரத்தில் உட்கார்ந்திருந்த பெண்ணிடம் இந்தப் பக்கமாக நகர்ந்து சன்னல் இருக்கையில் தர வேண்டுமாய் கேட்டுக் கொண்டிருந்தாள்.

இன்னும் கொஞ்சம் பேசவிட்டால் புகையிலை எச்சில் தெளித்துவிடுமோ என்ற பயத்தில், சாரி என்பதுபோல் தலையை ஆட்டிக் கொண்டே அந்தப் பெண் இடம் மாறி உட்கார்ந்தாள். ஆத்துப்பாலம் வந்ததும் ஏறத்தாழ பேருந்தே காலியாக இடது பக்க முதல் ஒற்றை இருக்கை காமனுக்குக் கிடைத்தது. உட்கார்ந்தான். பேருந்து பால் பண்ணையைத் தாண்டியபோது, தனது வேலைகளையெல்லாம் முடித்துக் கொண்ட நடத்துநர் முன்னே வந்து இஞ்சின் மீது சம்மணம் போட்டு உட்கார்ந்து கொண்டே



# "தொங்கினால் படியில் பிடி நழுவிப் போகுங்கால் சங்கினால் ஊதப் படும்."

எம்.திருமேனி

ஓட்டுநரிடம் கைநீட்ட, குறிப்பறிந்த ஓட்டுநர் பக்கத்தில் கிடந்த தண்ணீர் பாட்டிலை எடுத்து நீட்டினார்.

காலி பாட்டிலை வாங்கிக் கொண்டே ஓட்டுநர் கேட்டார் ''எறக்கம் எங்கப்பா?''

''மேட்டுத் தெருல ரெண்டு டிக்கட், காலனில ரெண்டு டிக்கட் அப்புறம் வேற எங்கையும் இல்ல. நேரா பஸ் ஸ்டாண்டுதான்''

''சொசைட்டில லோன் போட போகனும்னியே எறங்கிப் போகலாமா?''

எனக்கேட்ட ஓட்டுநரிடம், ''ரவி வர்றானாப் பாப்போம் கோவிந்து. வந்தான்னா போலாம். அவுங்க அப்பாவ கூட்டிக்கொண்டு ஆஸ்பிடல் போகனும்னான். வராட்டி ஓவர் டைம் பாக்கனும்'' என்றவாறு தொடர்ந்து பேசிக் கொண்டே வந்தார்கள்.

காலனி வந்ததும் சாலியும் காமனும் இறங்கிக் கொண்டார்கள். இறங்கிய கையோடு காமன் வாழைப் பழச் சீப்பை எடுக்க மறந்ததைக் கவனித்த சாலி, ''சத்தம் போட்டு வண்டிய நிறுத்துய்யா. வாழப் பழத்த மறந்துட்ட'' என்று இரைந்த சாலியிடம்,

''மறக்கல புள்ள. போகட்டும் விடு. ஒரு விஷயமாத்தான் வச்சுட்டு வந்தேன்.''

''ஏய்யா கிறுக்கு ஏதும் புடுச்சிறுக்கா ஒனக்கு. தெரிஞ்சே வச்சிட்டு வந்தாராமுல்ல தொர. பதினஞ்சு ரூவா, வெளங்குவியா நீ?''

கத்திக் கொண்டிருந்த சாலியிடம், ''விடு புள்ள. அந்தக் கண்டக்டரு மேட்டுத் தெருவுல ரெண்டு டிக்கட், காலனில ரெண்டு டிக்கெட்டு சொன்னாருல்ல.''

''அதுக்காவ?''

''ரெண்டு சனங்களையும் ஒரே பேரால கூப்பிடுற மனசு வேற யாருக்கு இருக்கு?''

''அதுக்காவ?''

''அதான் அவரோட மனசுக்கு ஏதாவது செய்யணும்னு தோணிச்சு. அவருக்காகத்தான் அங்கேயே அத உட்டுப்புட்டு வந்தேன்.''

சாலியின் முறைப்பை அலட்சியம் செய்தவாரே நடையைக் கட்டினான் 'நியூஸ் பேப்பர் காமன்.' ●



"ஏண்டா தாடி வளர்க்கிறே? காதல் தோல்வியா?"

"ஊஹூம் காதல் வெற்றி ஆகித் தொலைச்சதுக்குத்தான்."

- [illegible]



# மை பைக்!

# ...யாரையும் ஏத்துறதில்லை!

வண்டியில் தனியாகச் சென்றால் தள்ளாத முதியவரையோ அல்லது பள்ளிக் குழந்தைகளையோ பின்புறம் அமர்த்திச் சென்று உதவுவது என் குணமாக இருந்தது. ஒருமுறை பேருந்தைப் பிடிப்பதற்காக என் அனுமதியின்றி பின்புறம் அமர்ந்த ஒருவர் 'ப்ளீஸ் கொஞ்சம் அவசரம்!' என்றார். நானும் சிறிது வேகமாகச் சென்றேன். பேருந்து அருகே வந்தவுடன், ஒருபுறமாகக் காலை வைத்து அமர்ந்திருந்த அவர் பேருந்தில் ஏறுவதற்காக என் வண்டியிலிருந்து திடீரெனக் குதிக்கவே பேலன்ஸ் தடுமாறி நான் கீழே சாய்ந்து காயமடைந்தேன். அவர் என்னைப் பற்றிச் சற்றும் கவலைப்படாமல் வண்டியேறிச் சென்று விட்டார். அதிலிருந்து நான் யாரையும் வண்டியில் ஏற்றிச் செல்வதில்லை.

-வரத.சண்முகசுந்தர வடிவேலு,
வாழப்பாடி

நான் வண்டி ஓட்டக் கற்றுக் கொள்ள ஆசைப்பட்டதால் மாமா, அவருடைய டி.வி.எஸ். எக்ஸ்.எல். வண்டியில் அருகிலுள்ள மைதானத்திற்குக் கூட்டிச் சென்றார். வண்டியை நான் ஓட்ட, பின்னால் மாமா உட்கார்ந்தார். திடீரென வண்டி எதன் மீதோ மோதிச் சாய, நான் குதித்து இறங்கி விட்டேன். மாமா வண்டியோடு சற்றுத் தள்ளிப் போய் விழ, காலில் நல்ல அடி. கிரிக்கெட் விளையாட ஸ்டம்புக்குப் பதிலாக மைல் கல் சைஸில் கருங்கல்லை நிறுத்தி வைத்திருந்தார்கள். அதில் வண்டி போய் இடித்ததில் வந்தது வினை. வீக்கமும், நாலு நாள் லீவும் சேர்ந்து மாமா குணமானார். இன்று ஸ்கூட்டரை ஜாக்கிரதையாக ஓட்ட கற்றுத் தந்தது அந்த நிகழ்ச்சிதான்.

- பி.சங்கவி,
அண்ணாநகர்

ஒருமுறை நான் வெளியே சென்றபோது சின்ன விபத்து. ரோட்ல போய்க்கிட்டிருந்த ஒரு பெரியவர் மீது ஆட்டோக்காரன் லேசா தட்டிட்டு, அவனும் கவனிக்காம போய்ட்டான். ஆனால், அந்தப் பெரியவர் சற்றுத் தடுமாறி கீழே விழுந்ததில் காலில் சின்னக் காயம். அந்தச் சமயத்தில் நான் வண்டியில அந்தப் பக்கமா போனதால அவரைப் பக்கத்தில் இருந்த க்ளினிக்குக்கு அழைத்துச் செல்ல என்னோட பைக் எனக்கு உதவியா இருந்தது. அந்தப் பெரியவர், 'தம்பி உன் நல்ல மனசுக்கு உனக்கும், உன் வண்டிக்கும் ஒன்றும் ஆகாது' என்றார். இதுவரை எனக்கும் என் வண்டிக்கும் அந்தப் பெரியவர் ஆசி வழி நடத்துது. அவ்வளவு ராசியான வண்டி என் பைக்.

- புவனேஷ், நாகர்கோவில்.

உங்க பைக் அனுபவத்தை 'மை பைக்' என்று குறிப்பிட்டுப் புகைப்படத்தோடு எழுதி அனுப்புங்க. kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். செல்போனில் KACON என்று டைப் செய்து, ஒரு ஸ்பேஸ் விட்டு, உங்கள் அனுபவம், பெயர், ஊர் ஆகியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கும் எஸ்.எம்.எஸ்.செய்யலாம்.

# “ஆகாசத்தைப் பார்க்க வைத்தவர் மகரிஷி”

நா. மகாலிங்கம்

“அவர் எனக்கு குரு அல்ல, நண்பர்” என்று தன் நினைவுகளில் ஆழ்ந்துபேசத் தொடங்கினார் அருட்செல்வர் நா. மகாலிங்கம். வேதாத்திரி மகரிஷியின் பல ஆன்மிகப் பணி களுக்கு பக்கபலமாக இருந்த நா. மகாலிங்கம், சென்னையில் நடைபெற்ற அவரது நூற்றாண்டு விழா நிகழ்ச்சியில் கலந்துகொள்ள வந்தபோது பேசினோம்.

“1975ல் முதன்முதலில் அவரை அமெரிக்காவில் பார்த்தேன். சிகாகோ மியூசியம் பார்க்கப் போனபோது பார்த்தேன். சிகாகோ மியூசியம் பார்க்கப் போனபோது நம் சீடர்களுடன் தமிழில் பேசிக்கொண்டு போவது காதில் விழுந்தது. அதன் பிறகு ஆறேழு ஆண்டுகள் கழித்து மீண்டும் தில்லியில் வைத்துப் பார்த்தேன். பேசினேன். வள்ளலார் எங்களை ஒன்று சேர்த்தார்.

“அப்போது அவர் சென்னை தி.நகரில் இருந்தார். எழுத்தாளர் பகீரதனோடு அவருடைய ஃப்ளாட்டுக்குப் போய்ப் பேசிக்கொண்டு இருப்பேன். நல்ல ஞான

முன்னவர்.

பல சமயங்களில் நாங்கள் உரையாடும் விஷயங்களைப் பற்றி பின்னர் அவர் மௌனம் போட்டு யோசிப்பார். அதில் இருந்து புதிய செய்தி களைப் பின்னர் எடுத்துச் சொல்லு வார்.



“அவர் அடைந்திருந்த நிலை, வானப்பிரஸ்தம். ஆரம்ப காலத்தில் ஆயிரம் தறி போட்டு துணி நெய்து வியாபாரம் செய்தவர். பின்னர் தொழில் நசிந்து போய்விட்டது. மெள்ள மெள்ள ஆன்மிகத்துக்குள் அவர் முன்னேறி பெரும் இடத்தை அடைந்தார்.

“நமக்கு நவதுவாரம் உண்டு. ஞானிகளின் தலையில் இருக்கும் துவாரங்களுக்கு குகம், குய்யம் என்று பெயர். குழந்தையாக இருக்கும்போது, இந்தத் துவாரங் கள் மென்மையாக இருக்கும்.

பின்னர்
கெட்டிதட்டிப் போய்விடும்.
ஞானிகள் தம் பயிற்சியினால்,
பொன்மேனி அடைவார்கள்.''

இப்படி... நிறைய விஷயங்களைத்
தொடர்ந்து பேசியிருக்கிறோம். ஒரு முறை
ஒரு உரையாடலின்போது, அவர் தெரிவிக்
கும் கருத்துகள் எல்லாம் சங்கரரின்
அத்வைதம் தானே என்று கேட்டபோது,
'ஆமாம்' என்று அவர் தெரிவித்திருக்கிறார்.

''பின்னர், தமது கருத்துகளையும் பயிற்சி
களை எல்லோருக்கும் கொண்டுசேர்க்க, ஓர்
அமைதியான இடம் வேண்டும் என்றார்.
அவரை எங்கள் பொள்ளாச்சிப் பக்கம்
இருக்கும் ஆழியாறுக்கு அழைத்துச் சென்
றேன். அவருக்கு அந்த இடம் மிகவும்
பிடித்துவிட்டது. அங்கே எங்களுக்குக்
கொஞ்சம் இடம் இருந்தது. பதினோரு ஏக்கர்
நான் கொடுத்தேன். இன்னும் கொஞ்சம்
ஏக்கர் நிலங்களை வாங்கி மொத்தம் பதினேழு
ஏக்கரில் அறிவுத் திருக்கோவிலை அங்கே
எழுப்பினோம்.''

''அது மூன்று அடுக்குகளைக் கொண்டு
இருந்தது. தரைமட்டத்துக்குக் கீழே ஆழ்
நிலைத் தியானம். தரைமட்டத்தில் பயிற்சி
கள், தீட்சைகள். முதல் மாடியில் மகரிஷியின்
குடியிருப்பு என்று அந்த மையம் கட்டப்
பட்டது.

''பஞ்சபூதங்களில், அதுவரை யாரும்
ஆகாசத்தைப் பற்றி அதிகம் கவனித்ததில்லை.
நிலம், நீர், நெருப்பு என்று பேசினார்களே
ஒழிய, ஆகாசத்தையும் வெளியையும் யாரும்
அதிகம் புரிந்துகொள்ளவில்லை. இந்த
ஆகாசம்தான் அனைத்தையும் அடக்கிக்
கொண்டு இருக்கிறது, எல்லோரையும் வழிப்
படுத்திக்கொண்டு இருக்கிறது. ஆகாசத்தை
நன்கு புரிந்துகொண்டு, அதன் மேல் கவனத்
தைத் திருப்பியவர் வேதாத்திரி மகரிஷி.
மகரிஷியின் முக்கியமான பங்களிப்பு
என்று நான் நினைப்பது இதுதான்.''

- ஆர்.வெங்கடேஷ்

# நடக்குமென்பார்

## மேஷம்

**ப்ளஸ்:** பதவி உயர்வு கிட்டும். வீடு/மனை வாங்குவீங்க. நீண்ட நாள் வழக்கு வெற்றியளிக்கும். புதிய தொழில் முயற்சி பலனளிக்கும். மனைவி வழியில் சந்தோஷம் உண்டாகும்.

**மைனஸ்:** நண்பர்களால் தொல்லைகள் இருக்கும். செலவுகள் கட்டுக்குள் இருக்காது! குழந்தைகளால் மனசாந்தி கெடும்.

**பரிகாரம்:** அருகிலுள்ள சிவன் கோயிலில் வழிபாடு செய்யுங்கள்.

## மிதுனம்

**ப்ளஸ்:** தடைபட்ட திருமணம் நடக்கும். பணப் புழக்கம் பெருகும். ஆடை ஆபரணங்களை வாங்குவீர். தொலைதூர மனிதர்களால் நற்பலன் கிடைக்கும். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். வீடு / மனை வாங்குவீர்கள்.

**மைனஸ் :** நீண்ட தூர பயணமும், அதனால் ஏற்படும் அசதியும். நண்பர்கள் விலகிச் செல்வார்கள்.

**பரிகாரம்:** சனிக்கிழமைத் தோறும் சனி ப்ரீத்தி செய்தல்.

## சிம்மம்

**ப்ளஸ்:** சமுதாயத்தில் மதிப்பு உயரும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். உத்தியோகத்தில் நிம்மதி இருக்கும். வீடு மாற்றம் நிகழும். வெளி நாட்டு வேலை கிடைக்கும்.

**மைனஸ்:** வார்த்தைகளில் கவனம் தேவை. ஜாமீன் போடாதீர்கள். வாக்குவாதத்தால் மனம் நோகும். நண்பர்களே ஏமாற்றுவார்கள்.

**பரிகாரம்:** ராகு/கேது/குரு வழிபாடு.

## ரிஷபம்

**ப்ளஸ்:** கணவன் - மனைவியிடையே இருந்த விரிசல் விலகும். வியாபார முன்னேற்றம் இருக்கும். உத்தியோகத்தில் இட மாற்றம் உண்டாகும். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும்.

**மைனஸ்:** நெருங்கிய நண்பர்கள் விலகிப் போவார்கள். வேலைப் பளு அதிகரிக்கும். ஆரோக்கியம் கெடும். பண விஷயத்தில் கவனம் தேவை.

**பரிகாரம்:** ராகு/கேது/சனி வழிபாடு.

## கடகம்

**ப்ளஸ் :** பொருளாதாரக் கஷ்டம் விலகும். உத்தியோகத்தில் ஊதிய உயர்வு உண்டாகும். சொத்தில் இருந்த வில்லங்கம் நீங்கும். மனைவி வழியில் சுப நிகழ்ச்சி ஏற்படும்.

**மைனஸ்:** திடீர் செலவுகளால் திக்குமுக்காடுவீர்கள். உடல்நலனும் பாதிக்கும். சத்ரு தொல்லை இருக்கும். உடன் பிறப்புகள் மூலம் மனக் கஷ்டம் உண்டாகும்.

**பரிகாரம்:** ஒன்றுமில்லை.

## கன்னி

**ப்ளஸ்:** மறைமுக எதிர்ப்பு விலகும். திருமணத் தடை நீங்கும். நிலுவைகள் வசூலாகும். பொருளாதாரச் சிக்கல் தீரும். புத்திரப் பாக்கியம் கிட்டும். சொத்தில் இருந்து வந்த வில்லங்கம் நீங்கும்.

**மைனஸ்:** அநாவசிய செலவுகள் கூடும். நெருக்கமானவர்கள் உங்களைச் நிந்திப்பார்கள். உடல் நலனில் கவனம் தேவை. சாலை விபத்து ஏற்படும்.

**பரிகாரம்:** ஆஞ்சநேயர் வழிபாடு.

# நடக்கும்!

22.08.2010 முதல் 28.08.2010 வரை

தஞ்சை பரத்வாஜ்

## துலாம்

**ப்ளஸ்:** புண்ணிய ஸ்தலங்களுக்குச் செல்வீர்கள். இல்லற வாழ்வு இனிக்கும். வியாபார முன்னேற்றம் இருக்கும். உறவினரின் மூலம் நல்ல செய்திகள் வந்து சேரும்.

**மைனஸ்:** கடன் பிரச்னை துரத்தும். தந்தை வழிச் சொத்து கைவிட்டுப் போகும். உடல் நலன் பாதிக்கும். வயிற்றுப் பிரச்னை, கை கால் உபாதைகள் ஏற்படும்.

**பரிகாரம்:** ஆஞ்சநேயர் வழிபாடு.

## தனுசு

**ப்ளஸ்:** தந்தை வழிச் சொத்து வந்து சேரும். மனபாரம் விலகும். பணக் கஷ்டம் தீரும். குழந்தைகளின் படிப்பில் முன்னேற்றம் மெச்சத் தக்க அளவில் இருக்கும். திருமணம் கைகூடும்.

**மைனஸ்:** வண்டி - வாகனத்தில் செல்கையில் கவனம் தேவை. அலைச்சல் - அசதி இருக்கும். கூட்டாளிகளிடம் கவனம் தேவை.

**பரிகாரம்:** ஒன்றுமில்லை.

## கும்பம்

**ப்ளஸ்:** பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். சுபகாரியம் கைகூடும். குலதெய்வ வழிபாடு நடக்கும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். மகான்களின் தரிசனம் கிட்டும்.

**மைனஸ்:** கூட்டுச் சேர்ந்து தொழில் செய்வோரிடையே மனக் கசப்பு ஏற்படும். பணக்கஷ்டம் இருக்கும். குழந்தைகள் இடம் மாறிச் செல்வார்கள்.

**பரிகாரம்:** ஆஞ்சநேயர் நாமாவளி படித்து வருதல் நலம்.

## விருச்சிகம்

**ப்ளஸ்:** 'கனவு நனவாகும்.பணப்பிரச்னை இருக்காது. குழந்தை பாக்கியம் கிட்டும். வீடு / மனை வாங்குவீர்கள். சுபக்காரியம் நடக்கும்.

**மைனஸ்:** கால் பகுதியில் தொந்தரவு இருக்கும். கூட்டாளிகளுக்குள் விரிசல். குழந்தைகளால் தொந்தரவு. ஜாமீன் போட்டால் தொல்லை. உறவினர்களோடு சண்டை சச்சரவு இருக்கும்.

**பரிகாரம்:** ராகு/கேது வழிபாடு.

## மகரம்

**ப்ளஸ்:** வெளிநாட்டில் இருந்து நல்ல தகவல் வரும். உத்தியோகத்தில் பதவி உயர்வும் ஊதிய உயர்வு இருக்கும். வீடு/ மனை வாங்கும் யோகம் கிட்டும். உறவினர்களால் நற்காரியம் நடக்கும்.

**மைனஸ்:** குழந்தைகளின் படிப்பில் சுணக்கம் காணப்படும். செலவுகள் கை மீறும். தாயாரின் உடல்நிலை பாதிக்கும்.

**பரிகாரம்:** சனி பகவான் வழிபாடு சங்கடம் தீர்க்கும்.

## மீனம்

**ப்ளஸ்:** இல்லற வாழ்வு இனிக்கும். வீடு மாற்றம் உண்டாகும். அதனால் உத்தியோக மாற்றமும் உயர்வும் வரும். சொத்தில் இருந்து வந்த வில்லங்கம் நீங்கும். வழக்கு வெற்றி பெறும்.

**மைனஸ்:** உடல் ஆரோக்கியம் பாதிக்கும். உறவினரிடையே சுமூகமான உறவு இருக்காது. பிரச்னைகள் தேடி வரும்.

**பரிகாரம்:** ஆஞ்சநேயருக்குத் துளசி மாலை சாற்றி வழிபடவும்.



**''கூட்டி வரப்பட்ட கூட்டம்; யாரோ எழுதிக் கொடுத்துப் படிக்கப்பட்ட பேச்சு; ஜெயலலிதா, தான் இன்னமும் ஒரு நடிகைதான் என்பதை வெளிப்படுத்தியிருக்கிறார்'' என்று அ.தி.மு.க.வின் திருச்சிக் கூட்டத்தை வர்ணிக்கிறார் தி.மு.க. மாநிலங்களவை உறுப்பினர் திருச்சி சிவா.**

# ''வரம்பு மீறுகிறார்

**ஜெ.வின் கூட்டம் தமிழக அரசியலில் அதிர்வலைகளை உண்டாக்கியிருக்கிறதே?**

''நாலரை வருடங்களாக எங்கே இருந்தார் இவர்? மலையில் சுகவாசியாக இருந்தவருக்கு, மக்கள் பிரச்னைகள் இப்போதுதான் ஞாபகம் வந்ததா? தேர்தலுக்குத் தேர்தல் மட்டுமே வெளியே தலைகாட்டும் 'அறிக்கைத் தலைவி' ஜெயலலிதாவைப் பற்றி தமிழக மக்கள் நன்றாகவே புரிந்து வைத்திருக்கிறார்கள். அந்தக் கூட்டம் தமிழக அரசியலிலும் மக்கள் மனத்திலும் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தாது.''

**எந்தப் பிரச்னைக் குறித்துக் கேட்டாலும், ''மற்ற மாநிலங்களைப் பாருங்கள்'' என்று முதல்வர் திசை திருப்புவதாகச் சொல்கிறாரே ஜெ.?**

''ஆட்சிக்கு வந்தவுடனேயே விவசாயிகளின் 7000 கோடி கடனைத் தள்ளுபடி செய்தவர் கலைஞர்தான். இப்போதும் இலவச மின் மோட்டார் கொடுப்பதன் மூலம் அவர்கள் மேல் உள்ள அக்கறையைக் காட்டியிருக்கிறார். மாநில அரசின் மான்யத்தை அளித்து ரூபாய்க்கு ஒரு கிலோ அரிசியும், மலிவு விலையில் உணவுப் பொருட்களையும் வழங்குபவர் கலைஞர்தான். பஸ் கட்டணம், மின் கட்டணம் குறித்துப் பொய்ப் பிரச்சாரம் செய்யும்போது மற்ற மாநிலங்களை விட தமிழக அரசு எந்த அளவுக்கு மக்கள் நலனைக் கருத்தில் கொண்டு செயல்படுகிறது என்பதைச் சொல்ல, ஒப்பிட்டுப் பார்ப்பதில் என்ன தவறு இருக்க முடியும்? ஜெயலலிதா எது வேண்டுமானாலும் பேசலாம். திட்டங்களால் பயனடைந்துவரும் மக்கள் எங்களைக் கைவிட மாட்டார்கள்.''

**''குடும்ப ஆட்சிக்கு முடிவு கட்டுங்கள்'' என்று சொல்லியிருக்கிறாரே?**

''சசிகலா, தினகரன், வெங்கடேஷ் என்று மன்னார்குடி கூட்டத்தைப் போயஸ் தோட்டத்தில் வைத்துக் கொண்டு பாதுகாத்து வளர்க்கும் ஜெயலலிதாவுக்கு எங்கள் தலைவர் குடும்பத்தைப் பற்றிப் பேச சிறிதும் தகுதி கிடையாது. கலைஞர் ஆறாவது முறையும் அரியணை ஏற இருப்பதைப் பொறுக்க மாட்டாமல் புலம்புகிறார் ஜெ.''

**'காவிரி'ப் பிரச்னையில் தமிழகத்துக்கு கருணாநிதி துரோகம் செய்து விட்டதாகச் சொல்கிறாரே ஜெ.?**

''காவிரி ஆணையம் அமைக்கக் காரணமாக இருந்தவரே கலைஞர்தான். ஆணையத்தின் இறுதித் தீர்ப்பை எதிர்த்து



# ஜெயலலிதா!''

**- திருச்சி சிவா**

கர்நாடகம் உச்சநீதிமன்றத்தை அணுகிவிட்டது. அது, ''பேசித் தீர்த்துக் கொள்ளுங்கள்'' என்று சொல்லியிருக்கிறது. தமிழர்கள் பாதுகாப்புக் குறித்த கவலை காரணமாகவே சாதுர்யமாகப் பிரச்னையை அணுகினார் கலைஞர்.''

**கூட்டத்தைப் பார்த்து, 'இனி ஆட்சி மாற்றம்தான்' என்று ஜெ.வும் அ.தி.மு.க.வினரும் உற்சாகம் அடைகிறார்களே?**

''கனவு காணும் உரிமை ஜெயலலிதாவுக்கும், அ.தி.மு.க. தொண்டர்களுக்கும் உண்டு. அவரது ஆட்சிக் காலத்தில் சமூகத்தில் பாதிக்கப்படாத பிரிவினரே கிடையாது. குழந்தைகளுக்குச் சத்துணவில் போட்ட முட்டையைக் கூட ரத்து செய்த புண்ணியவதி இவர். ஆசிரியர்கள், அரசு ஊழியர்களை தீபாவளி பண்டிகைக் காலம் என்று கூடப் பார்க்காமல், ஏதோ கிரிமினல்கள் போல நடத்திச் சிறையில் அடைத்தவர். இவரது ஆட்சிக் காலத்தில் பார்வையற்றோர் கூட அடக்கு முறைக்கு ஆளானார்கள். இவரது ஆட்சியில் விவசாயிகள் எலிக்கறி சாப்பிடும் அவல நிலைக்குத் தள்ளப்பட்டார்கள். பட்டினிச் சாவுகள் நடந்தன. வேலை நியமனத் தடைச் சட்டம் என்று போட்டு இளைஞர்களின் வேலை வாய்ப்பைப் பறித்தவர் ஜெ. தமிழக மக்களைச் சுலபமாக ஏமாற்றி விடலாம் என்ற நப்பாசையில் நகர்வலம் வருகிறார். இவருக்குத் தக்க பதிலடியைத் தேர்தலில் கொடுப்பார்கள்.''

**முதல்வரை இனி 'திருக்குவளை தீயசக்தி' என்றழைக்கப் போவதாக ஜெயலலிதா கூறியிருக்கிறாரே?**

தலைவர் கலைஞர் வழிகாட்டுதலில் கண்ணியமான அரசியலைக் கற்றுத் தேர்ந்த எங்களுக்கு ஜெயலலிதா அளவுக்குத் தகுதி இறங்கிப் பேச முடியாது. பதிலுக்குப் பெயர் வைக்க எங்களுக்குத் தெரியாதா? ஏற்கெனவே டான்சி ராணி, வாய்தா ராணி, ஊழல் ராணி என்றெல்லாம் பத்திரிகைகளும் மக்களும் இவருக்கு வைத்த பெயர்கள் உலகப் பிரசித்தம். தவிர மறைந்த அண்ணன் காளிமுத்து, அ.தி.மு.க.வுக்கு இவர் தேவையற்ற சக்தி என்று அமரர் எம்.ஜி.ஆர். கட்சிப் பத்திரிகையில் கட்டம் கட்டிச் சொல்லியிருக்கிறார். வரம்பு மீறுகிறார் ஜெயலலிதா. சொற்களால் திருப்பித் தாக்கினால் தாங்க மாட்டார்!

**- ப்ரியன்**

# கண்டறியாதன கண்டேன்

சந்தனமும் குளிர்ச்சியும் போல, பிரிக்க முடியாத அங்கம் ஆலயமும் திருவிழாவும்!

சித்ரா பௌர்ணமி, வைகாசி விசாகம், ஆனித் திருமஞ்சனம், ஆடிப் பெருக்கு... என்று ஆண்டு முழுவதும் விழாக்களைச் சொல்லி ஆலய தரிசனத்துக்கான காரணத்தைக் கொண்டிருக்கிறது நம் மரபு. விழாக்களின் மூலம் - அதில் நடைபெறும் உலாக்களின் மூலம் - பலரையும் ஒருங்கிணையச் செய்தும், ஒத்துழைக்க வைத்தும் - சமூக இணக்கத்துக்கு, ஒத்திசைவுக்குத் தளம் அமைத்துத் தருகின்றன ஆலயங்கள்!

இறைவனுக்கும் நமக்குமான நெருக்கத்தை உணர்த்துகின்றன விழாக்கள். உயிர்ப்புக்குக் காரணம் பயிர் என்றால், அதற்குத் தேவை நீர். அந்த நீரை (கங்கையை) தலையில் கொண்டிருக்கிறார் சிவபிரான்; அந்த நீரில்தான் சயனித்திருக்கிறார் நாராயணன். நீரையும் கடவுளையும் பிரிக்க முடியாது என்று, புரிந்ததன் அடையாளமாகவே நடைபெறுகிறது தெப்பத் திருவிழா!

மாசி மக நாளில் திருக்கோஷ்டியூரில் நடைபெறும் தெப்பம் விசேஷமானது. அந்த நாளில், அங்கே ஏற்றப்படும் அகலில் ஒன்றை வீட்டுக்கு எடுத்து வருவார்கள். அடுத்த மகத்துக்குள் அவர்களின் விருப்பம் கைகூடும். மறு ஆண்டு, தெப்பத் திருவிழாவின்போது இரண்டு விளக்குகளை எடுத்துச் சென்று ஏற்றுவார்கள். திருக்கோஷ்டியூரில் இன்றும் நடைபெறும் இந்த வழக்கம், பலரின்

ஸ்ரீநிவாச ராகவன்





# ஆலயவிழாக்களின் அர்த்தங்கள்!

அனுபவம்!

**நீ**ருக்கான விழா தெப்பம் என்றால், நெருப்புக்கான விழா தீபம்! அருணகிரி என்னும் திருவண்ணாமலையில் நடைபெறும் கார்த்திகை தீப விழா, பழங்காலத்தில் இருந்தே புகழ் பெற்றது. இந்தத் தீபம் ஏற்றும்போது, சொல்லப்படும் ஸ்லோகம் ஒன்று உண்டு.

கீதா படங்கா மசகாச்ச வ்ருக்ஷா;
ஜலே ஸ்தலே யே நிவஸந்தி யே வா:
த்ருஷ்ட்வா ப்ரதீபம் நச ஜன்ம பாஜா:
பவந்தி நித்யம் ச்வபவசாஹி விப்ரா:

'புழு, பூச்சி உள்பட நீரிலும், பூமியிலும் வாழும் உயிர்கள் எதுவானாலும், இந்தத் தீபத்தைப் பார்த்துவிட்டால், அதன் பாவங்கள் நீங்கி, அடுத்த பிறப்பு இல்லாத பெரு நிலையை அடையட்டும்' என்பது இதன் பொருள்!

'உலகத்தின் நலனை முன்னிட்டு பிரார்த்தனை செய்யுங்கள்' என்று சொல்லவில்லை. ஆனால், இந்த ஸ்லோகத்தைச் சொல்லுங்கள் என்று வழிகாட்டியிருக்கிறார்கள்.

பானி, நீலு, வெள்ளம், ஜலம் என்று எந்த மொழியில் சொல்லி எடுத்துப் பருகினாலும், தாகத்தைத் தீர்ப்பது நீரின் இயல்பு! அந்தச் சொல்லோ, அதன் வரி வடிவமோ அறிய வேண்டிய அவசியமில்லை.

**ஆ**காயத் தலமான சிதம்பரத்தின் பெருந்திருவிழா, ஆருத்ரா! பனி பொழியும் மார்கழிக் காலத்தில், பரமனுக்கு அபிஷேகம் நடந்து கொண்டே இருக்கும். பனி சுமந்து அலையும் காற்றால் நமக்குப் பற்கள் கிடுகிடுக்கும்; உடலில் நடுக்கம் ஊடுருவும். அப்படியிருக்கும்போது, பரமனால் எப்படி அடுத்தடுத்து நிகழும் அபிஷேகத்தைத் தாங்க முடிகிறது?

இப்படியொரு கேள்வியை எழுப்பிய நீலகண்ட தீட்க்ஷிதர், அதற்கொரு பதிலும் சொன்னார்:

''இதிலென்ன ஆச்சர்யம்? என் மனத்தின் தாபம் என்னும் சூடு இருக்கிறது. அது ஒன்று போதாதா?''

மாணிக்கவாசகரின் கேள்வி நினைவுக்கு வருகிறது: 'தந்தது என்றன்னை; கொண்டது நின்றன்னை; ஆர்கொலோ நம்மிடை சதுரர்?' என்ன சாதுர்யமான கேள்வி!

''பயனில்லாத என்னைக் கொடுத்து, எல்லாமும் ஆன உன்னை

12

திருவிழா

நான் வாங்கிவிட்டேன். நம்மில் கெட்டிக்காரர் யார்''னு கேட்கிறார். இந்த ஞானமும் கெட்டிக்காரத்தனமும் எல்லாருக்கும் வாய்க்கிறதா?

உண்மைதான்; மனித மனம் சஞ்சலமும் சபலமுமே உருவானது. அப்படிப்பட்ட நம்மையும் கடைத்தேற்ற வேண்டும் என்பதற்காகவே, அரங்கநாதன் பரமபத வாசல் வழியே பிரவேசிக்கிறான். 'வைகுண்ட ஏகாதசி' என்று சொன்னாலும், 'திரு அத்யயன உத்ஸவம்' என்பதுதான் அரங்கத்தின் வழக்கு!

ஆடிக் கிருத்திகை, தைப்பூசம் என்று சொன்னால், முருகன் கோயில்களில் பக்த வெள்ளம். ஆடி அமாவாசை நாளில், ஸ்ரீராஜ ராஜேஸ்வரியாக ஊஞ்சலில் எழுந்தருளும் ஸ்ரீ அங்காளபரமேஸ்வரியைத் தரிசிக்க, மேல் மலையனூரில் லட்சக் கணக்கில் கூடுகிறார்கள் பக்தர்கள்; அதே நாளில் படிகளே இல்லாத சதுரகிரியில், ஏழு கி.மீ. தூரம் பயணித்து, சுந்தர மகாலிங்கரைத் தரிசிக்கிறார்கள்.

**ப**ண்ணாரியில் நடைபெறும் 'குண்டம் திருவிழா' போன்றும், சங்கரன் கோயிலின் 'ஆடித் தபசு' போன்றும் சிறப்பு வாய்ந்தது, குலசேகரப்பட்டினத்தில் நடைபெறும் தசரா! இங்கே 'முத்தாரம்மன்' என்ற பெயரில் கோயில் கொண்டிருக்கிறாள் அம்பிகை. மைசூரில் நவராத்திரியை 'தசரா' என்ற பெயரில் எவ்வளவு சிறப்பாகக் கொண்டாடுகிறார்களோ - அவ்வளவு விமரிசையாக, இங்கும் கொண்டாடுகிறார்கள். தென் தமிழகத்தின் மிகச் சிறப்பான திருவிழாக்களில் இதுவும் ஒன்று! திருச்செந்தூரில் இருந்து தூத்துக்குடி செல்லும் வழியில் உள்ளது குலசேகரப்பட்டினம்.

**தி**ருச்செந்தூரின் விசேஷ விழா, கந்த சஷ்டி என்னும் சூரசம்ஹாரம். அதே அளவு சிறப்பாக இந்த விழாவை நாகப்பட்டினம் அருகில் உள்ள 'சிக்கல்' என்னும் தலத்திலும் தரிசிக்கலாம். சூரசம்ஹாரத்துக்கான வேலினை, தம் மைந்தனிடம் 'வேல் நெடுங்கண்ணி'யான அம்பிகை தருவாள். அதை வாங்கியவுடன், முருகனின் திருமேனியில் வியர்வை ஊறும் அதிசயம் இன்றும் சிக்கலில் ஆச்சர்ய அனுபவம். 'சிக்கலில் வேல் வாங்கி செந்தூரில் சம்ஹாரம்' என்பது வழக்கு மொழி!

**ம**யிலையின் பங்குனிப் பெருவிழா இன்று அறுபத்து மூவர் விழாவாகவே கருதப்படுகிறது. ஆனால், ஞானசம்பந்தர் காலத்திலேயே நடைபெற்ற விழா இது! 'பங்குனி விழாக் காணாமல் போதியோ பூம்பாவாய்!' என்றே பாடுகிறார் சம்பந்தப் பெருமான்!

**பயனில்லாத என்னைக் கொடுத்து, எல்லாமும் ஆன உன்னை நான் வாங்கிவிட்டேன்.**

**கா**ஞ்சிபுரம், திருநாங்கூர் என்றவுடன் 'கருடசேவை'தான் நினைவுக்கு வரும். கருடன், அன்னம், குதிரை உள்ளிட்ட வாகனங்களில் ஆரோகணித்து பரமன் பவனி வருவது ஏன்?

'தன்னைத் தேடி வந்து பார்க்க முடியாத உடல் நிலையுடன், குறைபாட்டுடன் இருப்பவர்களையும் காப்பாற்ற வேண்டும்' என்கிற பேருள்ளத்தின் வெளிப்பாடுதான்! அதனால்தான், வாகனங்களோடு நின்றுவிடாமல், தேரிலும் உலா வருகிறான். அந்தத் தேர்களில் மிகப் பெரியது திருவாரூர்த் தேர்! 'ஆழித் தேர்' என்று அழகுபடுத்துவார்கள். தமிழகத்தின் மிகப்பெரிய திருவிழாக்களில் இதுவும் ஒன்று. அழகர் கோயிலின் அழகர் ஆற்றில் இறங்கும் வைபவமும், மீனாளின் திருமணமும் ஒன்றிணைந்த மதுரையில் சித்திரைத் திருவிழா மிக விசேஷமானது. தனித்தனியே நடைபெற்ற இந்த விழாக்களை ஒருங்கிணைத்ததன் மூலம், இதை தமிழகத்தின் பெரு விழா



வாக்கிய சிறப்பு, திருமலை நாயக்கரையே சேரும்.

தேரில் வரும் பரமனைப் பார்க்க மட்டுமல்ல; அவன் தேரின் கயிற்றைப் பற்றி இழுக்கவும் குழுமுகிறார்கள் பக்தர்கள். அப்படியும் ஒருமுறை தேர் அசையவில்லை. சக்கரம் புதைந்துவிட்டது. 'சேந்தனாரைப் பாடச் சொல்' என்றது அசரீரி. அனைவரும் வியக்கும் வண்ணம், 'திருப்பல்லாண்டு' பாடினார் சேந்தனார். வடம் பற்றி இழுக்க அவசியமின்றி, ஊர்ந்து வந்தது தேர். தில்லையில் நடந்த அற்புதம் இது!

தேரைப் பார்க்கும்போது, அர்ஜுன சாமர்த்தியம்தான் நினைவுக்கு வருகிறது. 'பள்ளத்தில் வீழாமலும், மேட்டில் சரியாமலும்' காக்கும் வல்லமைமிக்க கீதாசார்யனான கிருஷ்ணனிடம், தேரைச் செலுத்தும் பொறுப்பை ஒப்படைத்தானே? அதுவல்லவா சாதுர்யம்! அதுவல்லவா ஞானம்!

எவன் முன்னின்றால் தடைகள் முறியுமோ, எவன் முன்னால் எதிர்ப்புகள் இல்லாமல் போகுமோ, அவனை முன்னிறுத்திச் செயல்பட்ட புத்திசாலித்தனம் அர்ஜுனனுக்கு வெற்றியாக அமைந்தது. அந்தச் சாதுர்யம் நமக்கும் வரட்டும்!

இந்த நிலையில்... ஒரே ஒரு கேள்வி! யார் அழைப்பு அனுப்பி, இவ்வளவு பக்தர்கள் வருகிறார்கள்? கூட்டம், நெரிசல், காத்திருப்பு உட்பட அனைத்தையும் யாருக்காகச் சகிக்கிறார்கள்? அவர்கள் கொண்டிருக்கும் அளப்பரிய நம்பிக்கையால், அந்த நம்பிக்கைக்கு உயிர்ப்பூட்டும் மூர்த்தியால், அந்த மூர்த்தியின்பால் கொண்டுள்ள பக்தியால் சகிக்கிறார்கள்.

ஆம்; குடும்ப விழாக்களுக்குத்தான் அழைப்பிதழும், உபசாரமும்! ஆலய விழாக்களுக்கு இவை அவசியமில்லை. அதை உணர்த்துவது போலவே, அசைந்து அசைந்து வருகிறது திருத்தேர். அதில், அருள் நிலையமாகக் காட்சி தருகிறாள் சமயபுரத்தின் ஸ்ரீமாரியம்மன். சித்திரை மாதம் முதல் செவ்வாய் அன்று நடக்கிறது இந்தத் தேர் பவனி!

அவளது தேரின் வடத்தை நம் கரங்கள் பற்றட்டும்; நம் வாழ்வின் தடத்தை, அவன் பார்வை பற்றிக்கொள்ளும்! அது நம் பாக்கியம்!

**(நிறைந்தது)**

# திருச்சி விசிட்

**தி**ணறியது திருச்சி என தினசரிகள் வர்ணித்திருந்தன. தி.மு.க. அரசைக் கண்டித்துக் கோவையில் நிகழ்த்தப்பட்ட கண்டன ஆர்ப்பாட்டத்தினைக் காட்டிலும், திருச்சியில் கூட்டம் சற்றுக் கூடுதல். புதிய உற்சாகத்துடன் மேடையேறிய ஜெயலலிதா, வழக்கத்துக்கு மாறாக ஒண்ணே முக்கால் மணி நேரம் தொடர்ந்து பேசினார்.

இருபத்தியெட்டு ஆண்டு கால அரசியல் வாழ்வில், இதுபோன்றதொரு கூட்டத்தினைத் தான் கண்டது இல்லையெனக் குறிப்பிட்டார். தமிழக மாநகரங்களில் ஜெயலலிதாவே தலைமையேற்று நடத்தி வரும் கண்டன ஆர்ப்பாட்டங்கள், கட்சித் தொண்டர்களுக்கு உற்சாக டானிக்கா? கட்சித் தலைமை கொண்டிருந்த உறக்கத்தின் விழிப்பா? விசாரிக்க ஆரம்பித்தோம்...

**இ**ளம்பெண்கள் பாசறை முதன் முதலாகத் தொடங்கப்பட்டது ஸ்ரீரங்கத்தில்தான். உறுப்பினராக நான் அப்போதே சேர்ந்து விட்டேன். தமிழகம் முழுவதுமாக இளம் பெண்கள் பாசறையிலிருந்து என் போன்று நிறைய பெண்கள் வந்திருந்தனர். அந்த அம்மாவே முன்னின்று நடத்தி வரும் கண்டனக் கூட்டங்கள் நிஜமாகவே கட்சித் தொண்டர்களுக்கு உற்சாக டானிக்!

- ஜெ.சுதா, எம்.எஸ்ஸி., (ஐ.டி)
முதலாம் ஆண்டு மாணவி

**உ**ற்சாக டானிக்கும் அல்ல. குளுகோசும் அல்ல. நான்கு ஆண்டுகளாக அ.தி.மு.க தலைவி கொண்டிருந்த கும்பகர்ண உறக்கத்தின் விழிப்பு. நான்காண்டுகளாக விலைவாசி ஏறவே இல்லையா? திடீரென இப்போதுதான் எல்லாப் பொருட்களும்



* சுதா



* கணேசன்



* முரளிதரன்

# உற்சாக டானிக்கா? உறக்கத்தின் விழிப்பா?

விலையேறி விட்டதாக மேடையில் பட்டியல் வாசிப்பது, வரவிருக்கும் தேர்தலில் ஆட்சியைப் பிடிப்பதற்குத்தான். அ.தி.மு.க. ஆட்சிக்கு வந்தால் விலைகள் குறைக்கப்படும் என்றோ, மின்வெட்டு இராது என்றோ கூறவில்லையே ஏன்?''

**- ஆர்.கணேசன், சமூகநல ஆர்வலர்.**

**நா**லு வருஷமா சொகமா தூங்கிட்டு, தூக்கத்துலேர்ந்து எந்திரிச்சு நிக்குறதுல கட்சித் தொண்டர்களுக்கு வேணும்னா உற்சாகம் தரலாம் இந்தக் கண்டன ஆர்ப்பாட்டம். மேலும், 'கை' கோர்த்துச் செயல்படுவோம் எனச் சூசகமாக ஜெயலலிதா பேசுவது, கட்சித் தொண்டர்களை ஏமாற்றுவதற்குத்தான். தமிழக அரசியலில் வேறு எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தப் போவது இல்லை!

**- ஜி.கே. முரளீதரன், மாநிலச் செயலாளர், தமிழ்நாடு காங்.கமிட்டி.**

**நா**ன்கு வருஷம் அ.தி.மு.க. எதும் ஆர்ப்பாட்டம் நடத்தவில்லை என்பதெல்லாம் பொய். தாலுகா அளவில், மாவட்ட அளவில் போராட்டங்கள் தொடர்ந்து நடத்தி வந்துள்ளது அ.தி.மு.க. மக்கள் எழுச்சி கண்டு திகைத்துப் போய், திரித்துப் பேசி வருகிறது தி.மு.க. அது இனிமேல் எடுபடாது!

**- வனஜா சங்கர், அண்ணா அமைப்பு சாரா தொழிலாளர் நல வாரியம்.**

**ஆ**ரோக்கியமான ஜனநாயக செயல்பாட்டின் வெளிப்பாடே இதுபோன்ற கண்டன ஆர்ப்பாட்டங்கள். பணம் தந்து கூட்டி வரப்பட்ட கூட்டமல்ல இது எனத் தெரிகிறது. ஆளுங்கட்சி மீது கொண்டிருக்கும் அதிருப்தியே அந்த மாபெரும் கூட்டம். ஜெயலலிதாவின் இந்த வேகம் தேர்தல் பிரச்சாரத்திலும் தொடர்ந்து நீடிக்குமேயானால், ஆட்சி மாற்றத்துக்கு அடித்தளம் ஆகும்.

**-எஸ்.புஷ்பவனம், ஓய்வு பெற்ற பேராசிரியர்.**

செய்தியும், சித்திரங்களும்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**


✱ வனஜா சங்கர்


✱ புஷ்பவனம்

# காமெடியன்களி

**வ**டிவேலுதான் எனக்குப் பிடிச்ச காமெடி மழை. அவர் சிரிப்பு நடிகர் இல்லை. 'அதையும் தாண்டி... புனிதமானது புனித மானது'ன்னு கமல் சொல்வாரே குணாவில அதைப் போல 'சிரிப்பு நடிகர்' என்ற எல்லையைத் தாண்டி அவர் ஒரு 'கலைஞன்' என்ற அந்தஸ்தை அடைந்தவர்.




பர்சனலா மணி அண்ணனை (கவுண்டமணி) எனக்கு ரொம்பப் பிடிக்கும்; அது வேற. ஆனால் வயசுக்கு மதிப்பு இல்லாம உறவுமுறைக்கு வரையறை இல்லாம சிரிப்புக் காட்ட முயற்சி பண்றது நகைச்சுவை இல்லை. பத்தோடு பதினொண்ணு. அந்தோட இது ஒண்ணுன்னு லிஸ்ட்டில் சேருகிறவர் இல்லை கருணி லார். அவரின் குரலும் பாடிலேங்வேஜும் தனித்துவமானது. அதனா லேயே கருணியை ரொம்பப் பிடிக்கும். நாகரிகமான யதார்த்தத்தை மீறாத, வாழ்க்கையிலிருந்து பிரிக்க முடியாத நகைச்சுவை நடிகர் தங்கவேலு. அவரின் தொடர்ச்சிதான் வடிவேலு.

நகைச்சுவை நடிகர்களுக்குக் கொஞ்சம் அதிகமா 50 கிராம் கூடுதலா நடிக்கலாம்னு யாரோ தப்பா சொல்லிட்டாங்கப் போல தேவையில்லாம எல்லா இடத்துலேயும் முகத்தை அஷ்டகோணலாக்கிக்கிட்டு நமக்குக் கிச்சுகிச்சு மூட்டறதுதான் சிரிப்புன்னு நினைக்கிறவங்களை கோலிவுட்டில் தனியா ஒரு லிஸ்ட்டே போடலாம்.

பேசாமலேயே சிரிக்க வெச்சு, எவ்வளவு பெரிய அதிகார பலத்தையும் ஊமைப் படத்தால், காமெடியை வெச்சே கலக்குன, உலகத்தை உலுக்கி எடுத்த சார்லி சாப்ளின்தான் எல்லா காமெடிக்காரர்களுக்கும் குலதெய்வம் என்பது என் கருத்து.

**அ**சோக் நகர்ல இருந்தப்ப எங்க எதிர் வீட்டுல ஒரு ஆன்ட்டி, ''ஞாயிற்றுக்கிழமை ஆச்சே கவுச்சி கிவுச்சி வாங்கப் போகலையா?''ன்னு எங்க அம்மாவிடம் கேட்பாங்க. அம்மா, ''இனிமேதான்

# நலதெய்வம்!

போகணும்னு சொல்வாங்க''. உடனே அவங்க, ''நான் மதியமே மீன் குழம்பு வெச்சிட்டேன். அவரு அந்தச் சிறுக்கி லதா வீட்டிலேருந்து இங்கே வர்றதுக்குள்ள போதும் போதும்னு ஆயிடும். இந்த லட்சணத்துல தியானம் பண்ண ஐஸ் மலைக்கு ஆனாவூனாப் போயிடுவாரு. இருக்கிறப்பவே வாய்க்கு ருசியா அவருக்கு ஆக்கிப் போடணுமில்லே'' என்றார். நானும் இவ்வளவு அழகான இந்த ஆன்ட்டியை விட்டுட்டு லதா கூட சுத்தறவன் யாருன்னு அவங்க வீட்டுல போய்ப் பார்த்தா... ரஜினி ஸார் படத்துக்குக் கீழே மீன் குழம்பு சாப்பாடு வெச்சிருக்கு. எனக்கு ஓரளவு புரிஞ்சு போச்சு. ''உனக்கு இவரை ஏன் இவ்வளவு புடிக்குது?''ன்னு அந்த ஆன்ட்டிகிட்டே கேட்டேன்.

''அவருக்கு எப்பவும் சிரிச்ச முகம். எந்தப் பிரச்னை வந்தாலும் சிரிச்சிக்கிட்டே இருப்பாரு. சண்டையில கூட சிரிப்பாருன்னா பாரேன்!'' என்றார். சிரிப்பு மனநலம் பாதித்தவரையும் மயக்கும் மருந்து.

**எ**வன் அப்பன் பேர்ல எதை வேணும்னா சொல்லலாம். யார் ஆத்தாவைப் பத்தி என்ன வேணாலும் பேசலாம். தான் வாழ்ந்துக்கிட்டு இருக்கிற நாட்டை, சோறு போடற ஊரை கேவலமாப் பேசலாம். பொண்டாட்டி பத்திக்கூட பேசலாம்னு நினைச்சு... 'என்னடி அவன உத்துப் பாக்குற; அவனோட ஓடிப் போயிடலாம்னு பாக்கிறியா'ன்னு கேட்கிறதெல்லாம் காமெடின்னு கைதட்டி மட்டமான ரசனையை நம்ம புள்ளைங்களை நாமளே கெடுக்கக் கூடாது. சினிமாவுல தலைமுறைய வளர்க்கிற பொறுப்பு ஹீரோவுக்கு இல்லை. காமெடி நடிகனுக்குத்தான் இருக்கு. படம் ஊத்திக்கிட்டா ஒருமுறைதான் ரசிகன் பார்ப்பான். படத்துல வர்ற காமெடியன் சீனை வருஷம் முழுக்க தனி சேனல்ல பார்த்துக்கிட்டே இருப்பான். அவனை அறியாமலேயே அதுதான் அவனைச் செதுக்கும். படிக்கிற காலத்துல எல்லோரும் அஜித் மாதிரி அழகாவா இருக்க முடியும். பெரும்பாலும் கருணாஸ் மாதிரி சுமாரா இருப்பாங்க. அவங்களுக்கு ஃப்ரண்ட்ஸ் பட்டாளத்தைத் தக்க வெச்சிக்க, மத்தவங்களை கவர... இருக்கிற ஒரே யுக்தி ஹாஸ்யம்தான். அந்த

ஊர்வசி



ஹாஸ்யத்துக்கான கோனார் உரையாக சினிமா காமெடிதான் முன்னாடி வந்து நிற்கும். 'போல செய்தல்' என்பது ஆரம்பத்துல தவிர்க்க முடியாதது. படிக்கிற காலத்திலே நகைச்சுவைன்னு சொன்னாலே சினிமா காமெடி போலச் செய்யறதுதான்னு அமைஞ்சு போயிடும். அந்தப் பொறுப்பை உணர்ந்து லிமிட்டை மீறாம பார்த்துக்கிறவர் வடிவேலு.

ஹாஸ்யம் இருக்கிற மனசுல ஈகோ இருக்காது. ஈகோ இல்லாதவன் இயல்பா பேசுவான். தன்னை இயற்கையின் இயல்புன்னு நினைக்கிறவன் செடி கொடியோட எல்லாம் பேசுவான். நான் பேசுவேன். என் வீட்டில பாகற்காய்க் கொடி காய்க்காம அதுபாட்டுக்கு ரேஸ்ல ஓடற பெண்ணாட்டம் கொடி ஓடிட்டே இருந்தது. ஒருநாள் இல்ல பல நாள் 'இப்படி நீ பாட்டுக்கு வளர்த்துக்கிட்டே போறியே. இதனால யாருக்கு என்ன லாபம்? நீ காய்ச்சாதானே உம் மேல ஒரு பாசம் வரும். வாழும் போது நாலு பேருக்கு பிரயோஜனமா இருக்க வேணாமா உனக்கு நான் இருக்கேன். இந்த காம்பவுண்டில நீ தனியா இருக்கிறதா நெனைக்காதே'ன்னு அதைத் தொட்டுத் தொட்டுப் பேசுவேன். இப்போ போய்ப் பாருங்க காய்க்கத் தொங்குது. இதைத் தூரத்தில் இருந்து பார்த்தா ஓரகத்தனமா தெரியும். 'அது ஒரு மாயை; அதை ஓரகத்தனம் என்றால் செடிகொடிகளுக்கு உணர்வு இருக்குன்னு கண்டுபிடிச்ச இந்திய விஞ்ஞானி போஸ் ஒன்றும் கற்பனையில் வாழலையே! செடி கொடி பறவைன்னு எல்லோரிடமும் பேசுவது ஓர் ஆன்மிக அனுபவம். புத்தியிலும் மனசிலேயும் மகிழ்ச்சியும் சிரிப்பும் குழைஞ்சு இருக்கணும். அவன்தான் சிரிக்க முடியும். தன்னைச் சுற்றி உள்ளவர்களையும் சிரிப்பு பூசிய முகத்தோடு வைச்சுக்க முடியும். அவன் தனியாக நடக்கும்போது அவனுக்குத் துணையாக அவன் பாதங்களோடு இன்னும் ரெண்டு பாதச் சுவடுகள் அவனறியாமல் பின்தொடரும். அவை கடவுளின் பாதச் சுவடுகள். அவன் துயரப் படும்போதும் சிரிப்பு அவனை விட்டு விலகும் சூழல் வரும் போது, அனைவருக்குமான அவனின் சிரிப்புக்காகவே இப்போது தரையில் இரு சுவடுகள் மட்டுமே தெரியும். ஏனெனில் கடவுள் அவனைக் கைவிடாமல் அவனைப் பின்தொடர்வதை விட்டுவிட்டு அவனையே சுமக்க ஆரம்பித்து விடுவார். தரையில் தெரியும் சுவடுகள் அவனுடையவை அல்ல. சிரிக்க வைப்பவனை, சிரிக்கத் தெரிந்தவனைச் சுமக்கும் கடவுளின் சுவடுகள் அவை! சிரிச்சுக்கிட்டு இருக்கிறவனுக்கு ரசிகர்கள் அதிகம். என்னுடைய ரசிகர்களும் என் சிரிப்பால் ஹாஸ்யத்தால் அகப்பட்டவர்கள்தான். அப்படியொரு ரசிகர் எனக்குண்டு...




(தொடரும்)

புகைப்படம் : ஞானம்

# ஊர்வசி போட்டி சில்க்கி சாரி!



## மாதம் 3 புடைவைகள் பரிசு!

***வாசகர்களே!***

ஊர்வசி எழுதும் 'காலை எழுந்தவுடன் சிரிப்பு!' தொடரைத் தொடர்ந்து படிங்க... தொடரையொட்டி வாரம் ஒரு கேள்வி கேட்கப்படும்.

ஒவ்வொரு வாரமும் ஒரு கூப்பன் இடம்பெறும். விடைகள் மற்றும் உங்களின் பெயர் முகவரி ஆகியவற்றை அதிலேயே எழுதி இணைத்து மொத்தமாய் ஒவ்வொரு மாத இறுதியிலும் சேர்த்து அனுப்ப வேண்டும்.

சரியான விடை எழுதிய மூன்று வாசகர்கள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு, அம்மாதத்துக்கான அதிர்ஷ்டசாலிகளாகப் புடைவை பரிசு பெறுவார்கள். **தொடரின் இறுதியில் ஒரு மெகா பரிசும் உண்டு!**

ஆகஸ்ட் மாத கூப்பன்களை இணைத்து அனுப்ப கடைசித் தேதி : 06.09.10

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**அனுப்பவேண்டிய முகவரி:**
கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

---

பெயர் : ..............................................

முகவரி : ..............................................

..............................................

..............................................

..........................பின்கோடு:..................

தொலைபேசி : ..............................................

இ-மெயில் : ..............................................

ஆகஸ்ட் - 29

**காமெடியன்களின் குலதெய்வம் யார்?**

*விடையை டிக் செய்யவும்*

☐ கவுண்டமணி

☐ வடிவேலு

☐ சார்லி சாப்ளின்

☐ தங்கவேலு

வட்டமேஜை

'**108**' ஆத்திகர்கள் ஆனந்தப்படும் எண். ஆண்டவனை அர்ச்சிக்க 108 நாமாக்கள். 108- நாத்திகர்களுக்குப் பெருமை. ஆபத்தில் இருப்போரை ஆபத்பாந்தவனாய் வந்து காக்கும் சேவை ஊர்தி 108ன் தொய்வில்லாத பணி தொடரட்டும்.

**-நித்யா வேங்கடேஷ், ஜமீன் பல்லாவரம்**

இப்போதே 'பாலிடிக்ஸ் பஜாரில் 'சூடு' அனல் பறக்க ஆரம்பித்துவிட்டது. எப்போது மழை பெய்து 'சில்' லென்றாகும் என்று காத்திருப்போம்.

**- ஆர்.ராஜாமணி, சென்னை-88**

கார்த்தியின் பேட்டியில் அப்பா, அம்மா பார்த்துச் சொல்கிற பெண்ணைத்தான் வாழ்க்கைத் துணைவியாக அடைவேன் என்ற கூற்று ஜூனியர் சிவகுமாரின் அடக்கத்தைக் காட்டுகிறது.

**- நித்திலா செல்வராஜ், கோவை**

# இது ஓஹோ பக்கங்களா?

நிவேதனங்கள் எதை வலியுறுத்துகின்றன என்பதை அழகாக விளக்கியிருக்கிறார் ஸ்ரீனிவாச ராகவன்.

**- சி.அனுஷா, சென்னை**

தராக பதில்களில் பல பதில்கள் அருமை. குறிப்பாக விஜய் மற்றும் திக்விஜய் சிங் சார்ந்த பதில்கள் நச்சென இருந்தன. மூன்றரை வயதுக் குழந்தையைக் கொன்ற இளம்பெண்ணுக்கான கேள்வியில் உண்மையான குற்றவாளியைச் சுட்டிக்காட்டியிருப்பது தராசின் துணிவைக் காட்டியது.

**- ராஜி ராதா, பெங்களூரு-34**

'ஞாநி'யின் 'ஓ' பக்கங்கள் அரசியல் களத்தில் பல புதிய சிந்தனைகளை எழுப்பியதை யாரும் மறுக்க முடியாது. நாட்டு நடப்பினை, ஆளுவோர் செயல்பாட்டினை அக்குவேறு ஆணிவேறு என அலசும் 'ஓ' பக்கங்களை 'கல்கி' வெளியிடுவது அதன் துணிவைக் காட்டுகிறது. நடுநிலையுடன் செயல்படும் கல்கியில் 'ஓ' பக்கங்கள்... 'ஓஹோ' பக்கங்கள்.

**- என்.சண்முகம், திருவண்ணாமலை**

இளங்கோவனின் பேச்சு தி.மு.க.வினரின் நெஞ்சங்களின் வலியை, கார்ட்டூன் மூலமாக கல்கியில் பார்த்ததும் சிரிப்புத்தான் வந்தது!

**- வே.முருகேசன், சென்னை-88**

# இது அவமானம் அல்ல!

எந்த மருந்தாலும் கட்டுப்படுத்த முடியாத 'சூப்பர் பக்' என்ற 'நியூ டெல்லி டெடல்லோ பீட்டலேக்ட மோஸ்' என்ற பாக்டீரியாவைப் பற்றி மருத்துவக் கட்டுரை எழுதி உலக அளவில் மீடியாக்களின் கவனத்தை ஈர்க்க வைத்த 32 வயது கார்த்தி கேயனைச் சந்தித்தபோது...



● கார்த்திகேயன்

**அதற்கு ஏன் டெல்லி பெயரை வைக்கணும்? இந்தியாவை அவமானப்படுத்துவதற்குத்தானே?**

'கண்ணில் வரும் ஒரு வகை தொற்று நோய்க்கு 'மெட்ராஸ் ஐ' என்று பெயர் உள்ளது. அதனால் நம் சென்னைக்கு அவமானமா வந்துவிட்டது? அது மட்டும் இல்லை. இதே போன்ற பாக்டீரியாக்களை வெனிஸ், சியோல் என்று இன்னும் பல உலக நகரங்களிலும் கண்டுபிடித்திருக்கிறார்கள். அப்போதெல்லாம் அந்த பாக்டீரியாக்களுக்கு அந்தந்த நகரங்களின் பெயரோடு இணைந்த பெயரைச் சூட்டுவதுதான் உலகளாவிய பழக்கமாக இருந்து வருகிறது. ஆக, புது டெல்லி மருத்துவ மனையில் கண்டுபிடிக்கப்பட்ட இந்த பாக்டீரியாவுக்கு என்.டி.எம். 1 என்று பெயர் வைத்ததை நாம் ஏன் அவமானமாக எடுத்துக் கொள்ள வேண்டும்?'

**இந்த ஆய்வுக்கட்டுரையை 'லான்செட்' அறிவியல் இதழில் வெளியிட அனுப்பியபோது, இது வீணான சர்ச்சைகளுக்கு வழிவகுக்கும் என எதிர்பார்த்தீர்களா?**

'இல்லை. ஆராய்ச்சியாளர்கள் தங்களின் முக்கியமான ஆராய்ச்சிகள் குறித்த கட்டுரைகளை விஞ்ஞான இதழ்களில் வெளியிடுவது உலகம் முழுவதும் கடைபிடிக்கிற ஒரு விஷயம்தான். மீடியாதான் பரபரப்புக்காக இப்படி ஒரு சர்ச்சையை ஏற்படுத்திவிட்டன.'

**இந்த ஆராய்ச்சியின் காரணமாக இந்தியாவுக்கு வரும் மருத்துவ டூரிஸ்டுகளின் எண்ணிக்கை பாதிக்கப்படும் என்கிறார்களே?**

'என் ஆராய்ச்சியை நான் சொல்லி இருக்கிறேன். மருத்துவ டூரிச சர்ச்சைகள் பற்றி நான் கருத்து கூற விரும்பவில்லை.'

**உங்கள் எதிர்கால லட்சியம்?**

'இந்த ஆராய்ச்சியைத் தொடர்ந்து நடத்தி, இந்த பாக்டீரியா குறித்து இன்னும் பல முக்கியமான விஷயங்களைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதுதான் என் விருப்பம்.'

**- சந்திரமௌலி**

ஈஸி போட்டி
சிங்கி சாரி!



ஜூலை
மாதத்துக்கான

# பட்டுப்புடைவைப் போட்டி முடிவு!

**ஊ**ர்வசி எழுதும் 'காலை எழுந்தவுடன் சிரிப்பு' தொடரில் இடம்பெற்ற போட்டியில் பங்கேற்ற ஆயிரக்கணக்கான வாசகர்கள் அனுப்பி இருந்த விடைக் குவியல்களில் இருந்து சரியான விடையை எழுதியவர்களைத் தேர்வு செய்து, பின்னர் குலுக்கல் முறையில் மூன்று வாசகர்களை அதிர்ஷ்ட சாலிகளாக அறிவித்து அவர்களுக்குத் தலா ஒரு பட்டுப் புடைவை வீதம் பரிசளிக்கப்படுகிறது.

**கேள்விகள்:** 1. இரண்டாம் முறை ஊர்வசி தூங்கும்போது எழுப்பியது யார்?
2. ஊர்வசி வீட்டில் வளர்த்த செல்லப்பிராணி?
3. ஊர்வசி கேள்வி கேட்ட பேராசிரியர் யாராக இருக்கும்?

**விடைகள்:** 1.விஜயலட்சுமி 2. சக்கி 3.கு.ஞானசம்பந்தம்

ஜூலை மாதத்துக்கான

## பட்டுப் புடைவைகள்

பரிசு பெறும் அதிர்ஷ்டசாலிகள்:

- 1. யு.ரஸ்மிலா, குமரி
- 2. எல்.பவித்ரா, சிதம்பரம்
- 3. நிர்மலா, சென்னை

**பங்கேற்ற வாசகர்களுக்கு நன்றிகள்...!**
**பரிசு பெற்றவர்களுக்குப் பாராட்டுகள்!**

# புற்றுநோய்க்கு ஒரே இடத்தில் தீர்வு!

## ONE STOP SOLUTION FOR CANCER



- PET CT SCAN
- All Endoscopies
- Linear Accelerator & Brachy Therapy
- Radiation
- IGRT
- Surgical Oncology
- Medical Oncology

- பெட் சீடி ஸ்கேன்
- அனைத்து என்டோ ஸ்கோபி
- கதிர்வீச்சு
- லீனியர் ஆக்ஸிலரேடர் & உட்கதிர்வீச்சு
- IGRT
- புற்றுநோய் அறுவை சிகிச்சை
- புற்றுநோய் மருத்துவம்

**இலவச ஆலோசனைக்கு:**

**(044) 2246 9200**
**(044) 66 300 300**

PET CT CENTRE AT CANCER INSTITUTE (WIA)
CANAL BANK ROAD, GANDHI NAGAR, ADYAR, CH-20

24 HRS PHARMACY & AMBULANCE SERVICES AVAILABLE

# Dr. KAMAKSHI MEMORIAL HOSPITAL



# 1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.
Ph: 2246 9200, 6630030 Fax : 22463282 66300400
E-mail: info@drkamakshimemorialhospital.org.
Website: drkamakshimemorialhospital.org.

Shivaa